செங்காய்வேளை, ஓர்பூடு
செங்காரன், } கருஞ்சிவலை [பு
செங்காரி, }
செங்கார், ஓர்விதநெல், கருஞ்சிவப்
செங்காளுரை, ஓர்கொக்கு
செங்கிடை, } ஓர்கிடைச்சி
செங்கிடைச்சி, }
செங்கிரந்தி, ஓர்கிரந்தி
செங்கிளுவை, ஓர்கிளுவை
செங்கீரை, ஓர்கீரை, பிள்ளையிருகையு
முழந்தாழ்களுமூன்றித் தலைநிமிர்
த்தியாடல்
செங்கீரையாடுதல், சாணைபிற்பிள்ளை
தலையுயர்த்திக்கைகாலூன்றியுடம்
பையசைத்தல்
செங்குங்கிலியம், ஓர்சரக்கு
செங்குத்து, நேரேநிமிர்ந்தது
செங்குந்தம், கண்ணோயுளொன்று
செங்குமிழ், ஓர்மரம்
செங்குமுதம், செவ்வாம்பல்
செங்குரங்கு, ஓர்குரங்கு
செங்குவளை, ஓர்நீர்ப்பூ
செங்குளவி, ஓர்குளவி
செங்குன்றி, ஓர்குன்றி
செங்குன்று, ஓர்தலம்
செங்கை, ஆதிரைநாள்
செங்கையான், ஓர்பூடு
செங்கொடிவேலி, } ஓர்கொடி
செங்கொடுவேலி, }
செங்கொல், பொன்
செங்கொல்லர், தட்டார்
செங்கோடு, ஓர்மலை, செருந்திமரம்
செங்கோடுபாய்தல், மலையுச்சியிலி
ருந்துபாய்தல்
செங்கோட்டம், ஓர்மருந்து
செங்கோட்டியாழ், நால்வகையா
ழிலொன்று
செங்காலம், செம்புமணல் [த்தல்
செங்கோலாணை, செங்கோல்செலு
செங்கோல், ஆணைநடத்துங்கோல்,
நீதி
செங்கோற்கடவுள், இயமன்
செங்கோன்மை, நீதிவழுவாவாளுகை
செச்சை, உதயசந்திரன், சிவந்தகி
லம், செங்காடு, செஞ்சாந்திலங்கு
ழம்பு, செந்துளசி, சோடு, நீறு,
வீட்டின்மேற்பக்கம், வெட்சிமர
ம், வெள்ளாட்டுக்கடா

செஞ்சடையோன், காசிமீரப்படிக
ம், சிவன், வயிரவன், வீரபத்திரன்
செஞ்சந்தனம், ஓர்சந்தனம்
செஞ்சம்பா, ஓர்நெல்
செஞ்சாந்து, குங்குமமுதலானசிவ
ந்தபரிமளத்தாற்கூட்டுகிறகூட்டு
செஞ்சாலி, செந்நெல்
செஞ்சால், துப்பாக்கிமுதலியன
செஞ்சி, அரணுளபட்டினம், ஓரூர்
செஞ்சிலை, கற்காவி, சாத்திரவேதி,
செங்கல்
செஞ்சீரகம், ஓர்சீரகம்
செஞ்சுடர், ஆதித்தன், தீ
செஞ்சுடர்ப்பகவன், அக்கினிதேவ
ன், சூரியன், தீ
செஞ்செவியர், செல்வர்
செஞ்செவ், நேரே [ம்
செஞ்செழிப்பு, செழிப்பு, தாராள
செஞ்சேறு, சிவந்தகுரி
செஞ்சொல், வெளிப்படைச்சொல்
செஞ்சோதி, சிவந்தஒளி, மிகுபிரவை
செஞ்சோளம், ஓர்சோளம்
செஞ்சோறு, இரத்தமூட்டியசோறு
செடகன், } அடிமை, வேலைகார
செடன், } ன்
செடி, ஒளி, குணமின்மை, செத்தை,
பதனழிவு, பற்றை, பாவம், புதல்
செடிக்காடு, பற்றைக்காடு
செடிக்குடிபுக்கி, நாகரவண்டு
செடிச்சி, கெட்டவள்
செடித்தல், செடிபற்றல்
செடியன், கூட்டற்றவன்
செடிஆஞ்சல், செடில்குற்றியாடு
மூஞ்சல்
செடில், ஓர்கருவி [யன்
செட்டி, குமரன், வாணிபன், வைசி
செட்டிச்சி, செட்டிப்பெண்
செட்டிநாகம், ஓர்பாம்பு
செட்டிமை, செட்டித்தன்மை
செட்டு, வியாபாரம்
செட்டை, இறகு, கைப்பட்டை
செணம், சணம்
செண்டாயுதன், ஐயன்
செண்டு, குதிரைவையாளிவீதி, பந்
து, பந்தெறிவீதி, பூஞ்செண்டு
செண்டுவெளி, வெளி, வையாளிவீதி
செண்ணம், வடிவு
செண்பகம், சண்பகம்

செண்பகவருக்கை, ஓர்பலா
செதில், செகின், தோல், பொருக்கு
செதிள், சிறுதுண்டு, சீவல், தோல்,
பொருக்கு
செதுக்கல், செதுக்குதல்
செதுக்கி, உளவாரமுதலியகருவி
செதுக்கு, உடற்றழும்பு, செதுக்கெ
ன்னேவல், சேறு, பூதம், மந்தி
செதுக்குதல், சீவுதல், புன்முதலிய
செதுக்கல்
செதுக்குவேலை, இரத்தினமுதலிய
வழுத்தும்வேலை
செதுக்கை, தழும்பு
செதும்பு, சேறு
செத்தல், அறக்காய்ந்தது, சாகுத
ல், பசுமையற்றது, மெலிந்தது
செத்து, சந்தேகம்
செத்தை, தூரால்
செந்தட்டு, அந்தரத்தட்டு, பொறு
ப்பில்லாமை
செந்தண்டு, செங்குருத்து, பவளம்
செந்தமிழ், இயற்றமிழ்
செந்தமிழ்க்குரியோன், அகத்தியன்,
வயிரவன்
செந்தமிழ்நாடு, பாண்டி
செந்தமிழ்நிலம், தமிழ்வழங்குமிட
ம் [க்கு
செந்தமிழ்வழக்கு, இயற்றமிழ்வழ
செந்தலைவிரியன், ஓர்பாம்பு [தழல்
செந்தழல், கேட்டைநாள், தீ, தீத்
செந்தழற்கொடி, பவளக்கொடி
செந்தாது, செம்பொன்
செந்தாமரை, சிவந்ததாமரை
செந்தாளி, ஓர்தாளி
செந்தாள், செந்தண்டு
செந்தி, திருச்செந்தூர்
செந்திரம், சிவப்பு, நெய்தனிலம்
செந்திரு, இலக்குமி
செந்திருக்கம், செந்துருக்கம்
செந்திருக்கை, ஓர்மஞ்சள்
செந்தில், திருச்செந்தூர் [வப்பு
செந்திறம், குறிஞ்சியாழ்த்திறம், சி
செந்தினை, கம்பு, சிவந்ததினை
செந்தீ, அக்கினி, ஓர்சிலந்தி
செந்திவண்ணன், செவ்வாய்
செந்திவளர்ப்போர், பார்ப்பார்
செந்து, அணு, ஊர்வன, கிழநரி, ச
டாமாஞ்சி சிலட்பிராணி, நரக
ம், பெருங்காயம்
செந்துத்தானம், ஓர்நரகு
செந்துத்தி, ஓர்துத்தி
செந்துநாசனம், பெருங்காயம்
செந்தும்பை, ஓர்தும்பை
செந்துரசம், ஓர்பிசின்
செந்துருக்கம், ஓர்செடி, ஓலைை
யடைக்குஞ்சுருள்
செந்துருக்கு, ஓர்செடி
செந்துருதி, ஓர்நரகம், ஓர்பண்
செந்துளசி, ஓர்துளசி
செந்துளிர், செந்தளிர் [ஓர்வெண்பா
செந்துறை, ஆடற்கேற்கும்பாட்டு,
செந்துறைவெள்ளை, இரடியாயள
பொத்துமுடியும்வெண்பா
செந்தூக்கு, ஓர்கையாற்றூக்குமிலே
சானதூக்கு, கைத்தூக்கு
செந்தூரம், இலிங்கபாஷாணம்,
பொன்முதலியவற்றலாகியசுண்
ணம் [ந்தூரமாதல்
செந்தூரித்தல, சிந்தூரநீற்றுதல், சி
செந்தூள், செம்பராகம், மிருதுவா
னதூள்
செந்தொடை, சிவந்தமாலை, மோ
னைமுதலாகப்புகன்றதொடைபு
கலாதுதொடுப்பது
செந்தொடையன், சிவன், வயிரவன்
செந்தொட்டி, ஓர்பாஷாணம்
செந்தோட்டி, ஓர்செடி, சிறுகாஞ்
சொறி, பெருங்காஞ்சொறி
செந்நகரை, ஓர்மரம்
செந்நாகம், கேது
செந்நாடிக்கா, மூக்கிரட்டை
செந்நாயுருவி, ஓர்நாயுருவி
செந்நாய், ஓர்நாய்
செந்நிறக்கல், மாமிசசிலை
செந்நீர், இரத்தம்
செந்நெல், நன்னெல்
செந்நெறி, சன்மார்க்கம், நல்வழி
செபத்தியானம், அந்தரங்கசெபம்
செபமந்திரம், செபிக்கும்மந்திரம்
செபமாலை, செபமெண்ணுமாலை
செபம், மந்திரமுச்சரித்தல், மன்று
ட்டு
செபவடம், செபமாலை [ரன்
செபவான், செபவனுட்டிப்புக்கா
செபனம், செபம்பண்ணுதல் [டுதல்
செபித்தல், உருவேற்றுதல், மன்று

செப்படி, } செப்பிடுவித்
செப்படிவித்தை, } தை [ட்டை
செப்பட்டை, செட்டை, தோட்ப
செப்பமிடுதல், செவ்வைபண்ணுத
ல், திருத்துதல்
செப்பம், இணக்கம், ஒப்பரவு, செ
வ்வை, திருத்தி, நடுநீதி, மார்பு, வ
ழி, வீதி
செப்பலோசை, மத்திமவோசை,
வெண்பாவிேளசை
செப்பல், ஓரோசை, சொல்லுதல்
செப்பனிடுதல், ஒப்பயாக்கல், செ
வ்வைபண்ணுதல்
செப்பன், செப்பம்
செப்பிடில், சடாமாஞ்சில்
செப்பிடுவித்தை, ஓர்தந்திரவித்தை
செப்பியம், திரும்பத்திரும்பவுச்சரி
த்தல் [சொல்
செப்பு, சிமிழ், செப்பென்னேவல்,
செப்புச்சிலை, மாந்தளிர்க்கல்
செப்புதல், சொல்லுதல்
செப்புநிறம், கருஞ்சிவப்பு
செப்புநெரிஞ்சி, சிவப்புநெரிஞ்சி
செப்புப்பட்டயம், செப்புத்தகட்
டிலெழுதியவுறுதி
செப்புப்பாளம், செம்புப்பாளம்
செப்புமணல், செம்புமணல்
செப்புமலை, காஷாயம்
செப்போடு, செம்பாலாயவோடு
செம், சிவப்பு, செம்மை
செம்பசலை, } சிவப்புப்பசளை
செம்பசளை, }
செம்பஞ்சி, } சிவத்தபஞ்சு
செம்பஞ்சு, } [தல்
செம்பஞ்சூட்டுதல், செம்பஞ்சழுத்
செம்படத்தி, செம்படவப்பெண்
செம்படவர், மீன்பிடிகாரரிலோர்
வகை
செம்படாம், சிவப்புச்சீலை
செம்படிகம், காசிமீரப்படிகம்
செம்படை, சிவந்தமயிர்
செம்படைச்சி, சிவந்தமயிருடையா
ள், செம்பட்டத்தி
செம்பட்டத்தி, செம்படத்தி
செம்பட்டை, செம்படை
செம்பண்ணை, காவற்பண்ணை
செம்பருத்தி, ஓர்செடி
செம்பருந்து, கலுழன்
செம்பலகை, செங்கல்
செம்பவளச்சம்பா, ஓர்நெல்
செம்பழம், காய்ப்பழம்
செம்பன், சிவலை [னது, நடுநிலை
செம்பாகம், சரிபங்கு, செவ்வையா
செம்பாடு, சிவந்தநிலம்
செம்பாதி, சரிபாதி
செம்பாம்பு, கேது
செம்பாரை, ஓர்நண்டு
செம்பாலை, மிடற்றிற்பிறந்துமிடற்
றினின்றிசைக்குமிசை
செம்பால், இரத்தம்
செம்பால்முடாங்கி, ஓர்பூடு
செம்பாளை, செந்நெல்
செம்பி, கருவண்டு, சிவப்பி
செம்பிச்சி, செந்தோட்டி
செம்பியன், சோழன் அவன் முத
லெழுவர்களிலொருவன்
செம்பிரால், ஓர்மீன்
செம்பில்வேதை, சோரபாஷாணம்
செம்பிறை, கற்கிட்டம், காளற்கல்,
தேகக்கல்
செம்பிணிறம், மாந்தளிர்க்கல்
செம்பின்பச்சை, நாகப்பச்சை
செம்பு, தபலை, பஞ்சலோகத்தொ
ன்று, அஃது தாம்பிரம்
செம்புகம், செம்போத்து [ணம்
செம்புக்குள்வேதை, கற்பூரபாஷா
செம்புலம், சுடுகாடு, செம்புமலை, பா
லைநிலம், போர்க்களம்
செம்புலி, ஓர்புலி
செம்புளிச்சை, செம்மணத்தி
செம்புறு, ஓர்மீன்
செம்புறைக்கல், ஓர்சிவத்தக்கல்
செம்புனல், இரத்தம்
செம்பூரம், } ஓர்தேன்
செம்பூரான், }
செம்பூறல், செம்பிற்களிம்பு
செம்பை, ஓர்மரம்
செம்பொடி, செம்புமணல், செம்ம
ணல், தேகக்கல் [டுபொருள்
செம்பொருள், கடவுள், சொல்லொ
செம்பொன், சுத்தபொன், பொன்
செம்போத்து, சண்பகம்
செம்மட்டி, ஓர்மட்டி
செம்மணத்தி, செம்புளிச்சை
செம்மணல், சிவத்தமணல்
செம்மணி, கண்ணின்கருமணியைச்

ழ்க்திருக்குஞ்சிவந்தமணி,குருந்தக்கல், குருவிந்தம்,கெம்பு,பதுமராகம், மாணிக்கம், மாமிசகந்தி
செம்மண், காவிமண், சிவந்தமண்
செம்மண்சிலை, கற்காவி
செம்மந்தாரை, ஓர்பூமரம் [றை
செம்மயிர்க்கொன்றை, ஓர்கொன்
செம்மரம், அழிஞ்சில்
செம்மலைப்பார், சிவந்தகற்பார்
செம்மலைப்பாலை, செம்பாலை
செம்மல், அரசன், அருகன், இசன், எப்பொருட்குமிறைவன், செம்முதல், தலைமகன், பழம்பூ, புதல்வன், பெருமை, பெருமையிற்சிறந்தோன்
செம்மறி, } ஓர்வகையாடு
செம்மறியாடு, }
செம்மாணி, ஓர்வகைப்பாதரட்சை
செம்மாத்தல், அகந்தையாயிருத்தல், நிமிர்ச்சியாயிருத்தல், மிகக்களித்தல்,
செம்மாந்தி, சக்கிலிச்சி
செம்மாப்பு, இறுமாப்பு
செம்மார், சக்கிலியர்
செம்மாளி, பரவரிடும்பாதகுறடு
செம்மானம், செக்கர்மேகம்
செம்மான், சக்கிலியன்
செம்மீன், ஓர்மீன்
செம்மீன்வயிரம், மீனம்பர்
செம்முதல், பொருமுதல், மூடுதல்
செம்முருங்கை, ஓர்முருங்கை
செம்முள்ளி, ஓர்முள்ளி
செம்மூக்கன், ஓர்வகைமுதலை
செம்மேவுதல், இணக்குதல், இணங்குதல், சரிப்படுதல்
செம்மை, அழகு, இணக்கம், கனம், சிவப்பு, செப்பம், செவ்வை, நிதார்த்தம், மாணிக்கம்
செம்மைகட்டுதல், நேர்கட்டுதல்
செம்மைக்கல், கானக்கல்
செம்மைபண்ணல், அலங்கரித்தல், ஒழுங்குபடுத்தல்
செம்மைப்படுதல், நற்சீரடைதல்
செம்மையாதல், நேராதல் [வசனம்
செம்மொழி, இயற்றமிழ்வசனம், நய
செம்மொழிச்சிலேடை, சிலேடையிலோர்பேதம், அஃதா மொழிப்பிரிப்பின்றிநிற்பச்சிலேடிப்பது

செயசெயவெனல், போற்றுதல்
செயத்தம்பம், வெற்றித்தம்பம்
செயநீர்க்கருந்தன், சவட்சாரம்
செயந்தி, திருச்செந்தி
செயபாரம், மரமஞ்சள்
செயபீதம், கௌரிபாஷாணம்
செயப்படுபொருள், காரியப்படுபொருள்
செயம், சயம்
செயலறல், } உதவியற்றுப்போதல், தத்துவமற்றுப்போதல்
செயலறுதல், }
செயலறவு, கையறவு
செயலறுநிலை, கையறுநிலை
செயலுவமம், செய்கையேயுவமானமாகக்கொண்டுவமிப்பது(உம்)களவிற்செயல்போலுங்களவிற்செயல்
செயலை, அசோகமரம்
செயல், ஒழுக்கம், காவல், செய்கை, சேறு, தொழில்
செயித்தல், சயித்தல்
செயிர், குற்றம், கோபம், சினம், செயிரென்னேவல், துன்பம்
செயிர்த்தல், சினத்தல்
செயிர்ப்பு, சினப்பு [வயல்
செய், சிவப்பு, செய்யென்னேவல்,
செய்கடன், நித்தியகருமம், பிதிர்கடன், முறைமை
செய்கரை, கட்டுக்கரை
செய்காரியம், செய்கருமம், செய்யவேண்டிய பிரகாரமெல்லாஞ்செய்வது [சவாய்பாடு
செய்கின்ற, நிகழ்காலப்பெயரெச்
செய்குறை, செய்கைத்தப்பிதம்
செய்குற்றம், செய்கைக்குறை
செய்குன்று, செய்கைமலை
செய்கூலி, செய்தகூலி
செய்கை, ஒழுக்கம், தொழில், பண்படுத்துவது
செய்கைக்காரன், செய்கையிட்டோன், வேலைகாரன்
செய்கைச்சரக்கு, வைப்புச்சரக்கு
செய்கைச்சீட்டு, செய்கையொப்பம்
செய்கைத்தரை, பண்படுத்தினநிலம்
செய்கைத்தாழ்ச்சி, செய்கைப்பிழை
செய்கைபூணுதல், செய்கைப்படுதல் [ம்பங்கு
செய்கைப்பங்கு, செய்கைக்குவரு

செய்கையாட்சி, செய்கையினுல்வ
ந்தவாட்சி
செய்கையுப்பு, விளைவிக்குமுப்பு
செய்த, செல்காலப்பெயரெச்சவா
ய்பாடு
செய்தல், செய்குதல்
செய்தவம், செய்யப்பட்டதவம்
செய்தி, ஒழுக்கம், சமாசாரம், சரி
த்திரம், செய்கை, செய்வாயென்
னுமுற்று
செய்திகொன்ருர், நன்றியீனர்
செய்து, வினையெச்சவாய்பாட்டி
ளென்று
செய்நன்றி, செய்தநன்றி
செய்நீர்ச்சித்திரம், நவசாரம்
செய்பாகம், செய்யும்பக்குவம்
செய்பாட்டுவினை, படுவென்னும்வி
குதிபுணர்ந்த முதனிலைகளையுடை
யனவாய்மூன்ரும்வேற்றுமைக்க
ருத்தாவைக்கொண்டுவரும்வினை
செய்பு, வினையெச்சவாய்பாட்டி
ளென்று
செய்ய, அழகிய-சிவந்த-சிறந்தவெ
ன்னும்பொருள்படவரும்பெயரெ
ச்சப்பண்புச்சொல், வினையெச்
சவாய்பாட்டிளென்று
செய்யல், செய்தல், சேறு [வாய்
செய்யவன், சிவத்தமேனியன், செவ்
செய்யள், இலக்குமி
செய்யன், சிவலை, சிவன், செராணி
செய்யா, வினையெச்சவாய்பாட்டி
ளென்று
செய்யாள், இலக்குமி
செய்யாள், ஓர்பூரம்
செய்பிய, வினையெச்சவாய்பாட்டி
ளென்று [டிளென்று
செய்யியா, வினையெச்சவாய்பாட்
செய்யிழை, பெண் [ரிசொல்
செய்யுட்சொல், உயர்ந்தசொல், தி
செய்யுட்பொருத்தம், பாட்டுட்பொ
ருத்தம்பத்து, அஃது உண்டி-எ
ழுத்து-கணம்-கதி-சொல்-தான
ம்-நாள்-பால்-மங்கலம்-வருணம்
செய்யுட்டாரணை, கவதாரணையிளெ
ன்று
செய்யுணடை, செய்யுள்வழக்கு
செய்யும், இருதிணைக்குமைம்பாற்கு
முரியவருகாலவினைமுற்று, வரு
காலப்பெயரெச்சவாய்பாடு
செய்யுள், பாட்டு
செய்யுள்வழக்கு, பாவின்வழக்கு
செய்யூ, வினையெச்சவாய்பாட்டி
ளென்று
செய்யோன், அருகன், செந்நிறமு
ள்ளோன், செம்மையுடையோ
ன், செவ்வாய்
செய்வித்தல், செய்யப்பண்ணுதல்
செய்வினை, குனியம், செய்கை
செரிகுடர், } உண்டதுதங்காதுக
செரிகுடல், } ழியுமுடல்
செரித்தல், சமித்தல்
செரியாக்குணம், சமியாக்குணம்
செரியாப்படுவன், ஓர்கோய்
செரியாமை, சமியாமை
செரு, சண்டை, போர்
செருகல், அடைசுதல், சொருகுதல்
செருகுகொண்டை, ஐம்பாலிளெ
ன்று, அஃது சுருள்
செருகுபூ, இடையிடைவைக்கும்பூ
செருக்கல், செருக்குதல்
செருக்களம், போர்க்களம்
செருக்களவஞ்சி, ஓர்பிரபந்தம், அ
ஃதுபறந்தலைச்சிறப்புக்கூறுவது
செருக்கன், ஆங்காரி
செருக்கு, ஆங்காரம், களிப்பு, செ
ருக்கென்னேவல்
செருக்குதல், அகங்கரித்தல், களிக்
குதல், மயக்கடியாக்குதல் [மடி
செருத்தல், எருமை-பசுவிவற்றின்
செருத்தி, விருதுக்கொடி
செருகர், படைவீரர் [வாட்கோரை
செருந்தி, ஓர்மரம், மணித்தக்காளி,
செருப்படி, } ஓர்பூடு
செருப்படிகாயன், }
செருப்பு, காறெடுதோல்
செருமல், } அடைசுதல், இருமு
செருமுதல், } தல், திணித்தல், நெரு
க்கல்
செருனர், செருகர்
செலக்கனல், அக்கினிக்கட்டி
செலக்குரு, } நவசாரம்
செலக்கூர்மை, }
செலக்கூபம், கண்டு
செலப்பிரீதி, கருப்பூரச்சிலை
செலமலம், கடற்பாசி
செலம், இலாமிச்சு, சலம்

செலல், கழிதல், போதல்
செலவயர்தல், போதல்
செலவழிதல், செலவுபோதல்
செலவழித்தல், செலவிடுதல்
செலவாளி, செலவுகாரன்
செலவிடல், } அனுப்புதல், எறி
செலவிடுதல், } தல், செலவழித்த
ல், விடுதல்
செலவு, உத்தரவு, செலவிடுதல், செ
ல்லும்பொருப்பு, பயணம், போ
க்கு, போதல், முடிவு, வழி
செலவுநடத்தல், செலவுநடத்திவரு
தல், செலவுநடத்துவருதல்
செலவோடுதல், விசாவித்தல்
செவியம், இலாமிச்சை
செலு, செத்தல், நறவிவிமரம், மீ
ன்செலு
செலுத்தல், } அனுப்புதல், கொ
செலுத்துதல், } டுத்தல், செருகுத
ல், நடத்துதல், விடுதல்
செலுக்தி, } செத்தல்
செலுங்தில், }
செலுப்பு, சிறுதுண்டு
செலுமுரல், ஓர்மீன்
செலுவல், செத்தல்
செலுவன், செத்தலன்
செல், இடி, உண்டியற்சீட்டு, கறை
யான், கையொப்பம், செல்லெ
ன்னேவல், மேகம், வேல்
செல்காலம், இறந்தகாலம், காரிய
ஞ்சித்திக்குங்காலம் [த்தல்
செல்லக்கட்டுதல், இறத்தல், சேர்
செல்லம், செல்வம் [ல்
செல்லல், துன்பம், நடத்தல், போத
செல்லன், செல்வன்
செல்லாக்காசு, வழங்காதகாசு
செல்லாக்காலம், நடப்பற்றகாலம்
செல்வி, செல்வி
செல்லியம், கோழி
செல்லு, செல்
செல்லுதல், கழிதல், காரியசித்தியா
தல், சாதல், போதல், வழங்குதல்
செல்லுமதி, செல்லவேண்டுவது
செல்லொளி, வைடூரியம்
செல்வக்கடி, பருங்கடி
செல்வச்சிரிப்பு, புன்முறுவல்
செல்வத்தின், சிறுதின்
செல்வநடை, மிருதுநடை

செல்வநரை, இடைநரை
செல்வப்பிள்ளைக்காய்ச்சல், ஓர்காய்
ச்சல்
செல்வப்பேச்சு, குதலைப்பேச்சு
செல்வமடி, மிருகங்களுக்குச்சௌக்
கியத்தினால்வளர்ந்திருக்குமடி
செல்வமட்டி, ஓர்கொடி
செல்வம், ஐசுவரியம், கல்வி, சீர், சு
வர்க்கம், பாக்கியம் [ல்
செல்வம்பொழிதல், செல்வங்காட்ட
செல்வன், அரசன், அருகன், கடவு
ள், செல்வமுள்ளோன், மகன்
செல்வாக்கு, பெறும்பேச்சு
செல்வி, இலக்குமி, ஐசுவரியமுடை
யாள், தலைவி, மகள்
செல்விக்கை, ஐசுவரியம், செல்வாக்கு
செவி, காது, கேள்வி, அஃது பஞ்ச
ப்பொறியிலொன்று
செவிகொடுத்தல், உற்றுக்கேட்டல்
செவிக்கெட்டுதல், } கேள்விப்படுத
செவிக்கேறுதல், } ல்
செவிசாய்த்தல், செவிகொடுத்தல்
செவிச்சொல், கேள்விச்சொல்
செவிடர், செவிமந்தர்
செவிடு, செவிப்புலனற்றது, அஃது
உறுப்புக்குறையெட்டிலொன்று
செவிட்டல், } அழித்தல்
செவிட்டுதல், }
செவிதாழ்த்தல், செவிகொடுத்தல்
செவிதின்றல், இரகசியம்பேசுதல்
செவிபடுவாதம், ஓர்வாதம்
செவிப்புலன், கேள்வி
செவிப்புற்று, ஓர்நோய்
செவிமந்தம், செவிடு
செவியடி, கன்னம்
செவியடித்தல், செவியாட்டல்
செவியம், செவ்வியம்
செவியறிவுறுத்தல், செவியுபதேச
மாய்ச்சொல்லும்புத்தி
செவியறிவுறூஉ, உபதேசம், ஓர்பிர
பந்தம், அஃது அவையடக்கிய
ற்பொருளுறக்கூறுவது
செவியறை, காதறை
செவிலி, செவிடு
செவிரம், பாசி
செவிலி, அக்காள், வளர்த்ததாய்
செவ், சிவப்பு, செவ்வை
செவ்வகத்தி, ஓரகத்தி

செவ்வட்டை, ஓரட்டை
செவ்வணி, தலைமகளை நூடிய தலைமக
  ன் அவன்விட்டபெண்ணுக்கணியு
  ஞ்செந்நிறவணி
செவ்வண், செங்குத்து, நேரேநிற்றல்
செவ்வந்தி, ஓர்பூச்செடி, செக்கர்
  மேகம்
செவ்வந்திக்கல், ஓர்கல்
செவ்வம்மான்பச்சரிசி, ஓர்செடி
செவ்வலரி, ஓரலரி
செவ்வல், சிவந்தநிலம்
செவ்வல்நார், } செவ்வாம்பல்
செவ்வல்லி, }
செவ்வவரை, ஓரவரை
செவ்வழி, ஓர்பண், அஃது நெய்த
  னிலத்தியாழ்
செவ்வழிப்பாலை, ஓரிராகம்
செவ்வள்ளி, ஓர்கொடி
செவ்வனூர், செவ்வல்லி
செவ்வன, செவ்வை
செவ்வாக்கு, நீண்டவலை
செவ்வாப்பு, ஓர்கட்டு
செவ்வாமணக்கு, ஓராமணக்கு
செவ்வாம்பல், அரக்காம்பல்
செவ்வாய், ஓர்கிரகம், ஓர்நாள்
செவ்வாரம், செய்கைக்குங்கமத்து
  க்குமுள்ளசரிவாரம்
செவ்வாவிரை, ஓராவிரை
செவ்வாழை, ஓர்வாழை
செவ்வானம், செக்கர்மேகம்
செவ்வி, அழகு, காலம், சித்திரை
  நாள், பருவம்
செவ்விண்டு, ஓர்பூச்செடி
செவ்விநிறம், மாந்துளிர்க்கல்
செவ்வியம், ஓர்மருந்து, அஃது ப
  ஞ்சமூலத்தொன்று, மிளகுகொ
  டி [மை
செவ்வியருமை, சமயம்பெறுமரு
செவ்விளகி, கழுதைவண்டு [நீர்
செவ்விளநீா, சிவந்ததோலுள்ளவிள
செவ்விளை, ஓர்வகைத்தென்னமரம்
செவ்வு, சிவப்பு, செவ்வை, முத்தெ
  ண்கணக்கிலோர்சூத்திரம்
செவ்வெண், எண்ணிடைச்சொல்,
  தொக்குவருகிறவெண்
செவ்வேள், குமரன்
செவ்வை, செப்பம்
செழிச்சி, செழிப்பு

செழித்தல், செழிக்குதல், பெருகுதல்
செழிப்பு, ஐசுவரியம், செழுமை, பொ
  லிவு, வளர்ச்சி
செழியன், பாண்டியன்
செழுப்பம், செழுமை
செழுமறை, நெருப்பு
செழுமை, அழகு, கொழுப்பு, சவு
  ந்தரியம், மாட்சிமை, வளமை
செழும்பல், செழிப்பு
செளிம்பன், குணக்கேடன்
செளிம்பு, களிம்பு
செளிம்பூறல், களிம்புப்பற்று
செறல், கொலை, பகை [மி
செறி, செறியென்னேவல், நெருக்க
செறிதல், கலத்தல், குளித்தல், சே
  ர்தல், நெருங்கல், பொருந்தல், மி
  குதல்
செறித்தல், அழித்தல், கொல்லல்,
  சேர்த்தல், நெரித்தல், பாதிடு, மூ
  ழ்கல்
செறிப்பு, சேர்த்தல், நெருக்கம்
செறிமை, நெருக்கம், மிகுதி
செறிவு, குணவலங்காரம்பத்திலொ
  ன்று, அஃது நெகிழிசையின்றிவ
  ரச்செய்புட்டொடுப்பது, நிறை
  வு, நெருக்கம், மிகுதி
செறு, சிறுவயல், செறுவென்னேவ
  ல, வயல்
செறுக்குதல், செறுத்தல்
செறுதல், கொல்லல், கோபித்தல்
செறுத்தல், கொல்லல், கோபித்த
  ல், தாக்குதல், நெருக்குதல், வெ
  றுத்தல்
செறுநர், பகைவர்
செறுப்பு, கொலை
செறும்பு, சலஞ்சாதித்தல், சிறும்பு
செறுவு, வயல்
செற்றம், கோபம், சலஞ்சாதித்த
  ல் சினம்
செற்றலர், பகைவர் [றுத்தல்
செற்றல், செறிதல், செறுத்தல், வெ
செற்றுர், கொலைசெய்வோர், பகை
  வர்
செற்று, செடி, நெருக்கம்
செற்றுதல், நெருக்குதல்
செற்றை, செத்தை
செனனம், பிறப்பு
செனித்தல், கருப்படுதல், பிறத்தல்

செனிப்பித்தல், பிறப்பித்தல்
செனிப்பு, சனிப்பு [தபலன்
சென்மசாபல்லியம், செனனமெடுத்
சென்மபத்திரிகை, சாதகம்
சென்மம், } சன்மம்
சென்மாக்கிரம், }
சென்மித்தல், கருப்படுதல், பிறத்தல்
சென்மிப்பு, பிறப்பு
சென்றதேய்ந்திறுதல், நூற்குற்றம் பத்தினொன்று, அஃது வரவரச் சொன்னயம்பொருணயங் குறைதல்
சென்னல், தேட்கொண்டை
சென்னுக்கூனி, இறால்
சென்னி, அச்சுவினிநாள், சோழன், தலை, பாணன், முடி
சென்னியர், பாணர் [ளம்
சென்னை, கதுப்பு, சென்னைபட்டி

## சே

சே, அழிஞ்சில்மரம், இடபவிராசி, எதிர்மறை, எருது, ஓரெழுத்து, சிவப்பு, சேரான்மரம், சேவென்னேவல், விலங்கேற்றின்பொது
சேகண்டி, சேமக்கலம், தெருக்காவல்
சேகம், தெளித்தல்
சேகரத்தார், கூட்டத்தார்
சேகரம், கூட்டம், சம்பாத்தியம், சேகரித்தல், தலை, தலையில்முடிக்கப்படுவன, மாமரம், முடி, முருங்கை [வி
சேகரி, சேகரியென்னேவல், நாயுரு
சேகரித்தல், கூட்டுதல், சம்பாதித்தல்
சேகரிப்பு, சேகரம்
சேகிவி, வாழை
சேகு, வயிரம்
சேக்கரித்தல், கொக்கரித்தல்
சேக்கு, முலைப்பால்
சேக்குதல், சிவத்தல்
சேக்கை, உடற்றழும்பு, கற்கடகவிராசி, சிவத்தல், செம்பஞ்சு, நண்டு, மக்கட்படுக்கை, முலை, விலங்கின்படுக்கை
சேங்கன்று, நாம்பன்கன்று
சேங்கொட்டை, சேரான்கொட்டை
சேகுரணம், கௌரிபாஷாணம்
சேகுனம், தெளித்தல், புசித்தல்
சேடகம், பரிசை
சேடசாயி, } விட்டுணு
சேஷசாயி, }
சேடகரம், ஓர்நோய்
சேடநீர், சிலேற்பனநீர்
சேடபாகம், மிச்சப்பங்கு
சேடம், } அழித்தல், எச்சில், சிலேற்பனம், மிச்சப்பொருள்
சேஷம், }
சேடர், அடிமைக்காரர், ஏவல்செய்வோர், நெய்வாரினோர்பகுதி
சேடன், } அடிமைக்காரன், அனந்தன், இளையோன், ஏவல்செய்வோன், ஓர்சாதியான், கட்டிளமையோன், பலதேவன், பாங்கன்
சேஷன், }
சேடி, அடிமைக்காரி, அழகுள்ளவள், இடையர்வீதி, இளையாள், ஏவல்செய்வாள், சேடியென்னேவல், தோழி, வித்தியாதரருலகு
சேடித்தல், அலங்கரித்தல், குறைத்தல், மிஞ்சிநிற்றல்
சேடியர், அடிமைகளிற்சிறந்தோர், ஏவற்பெண்கள், பாங்கியர்
சேடு, அழகு, இளமை, திரட்சி, நன்மை, பெருமை
சேஷை, } மாக்காப்பு
சேடை, }
சேஷையரிசி, அறுகரிசி
சேட்சி, தூரம்
சேட்செலவு, தூரமாய்ப்போதல்
சேட்டபாரி, முதன்மனைவி
சேட்டம், } ஆனிமாதம், திறம், முதன்மை, மேன்மை
சேஷ்டம், }
சேட்டனம், முயற்சி
சேட்டன் } மூத்தோன்
சேஷ்டன், }
சேட்டாதேவி, மூதேவி
சேட்டாநாசம், உலகமுடிவு
சேட்டி, } அக்காள், பெருமையிற்சிறந்தாள்
சேஷ்டி, }
சேட்டித்தல், } காரியப்படுதல், திறப்படல், நடத்தல்
சேஷ்டித்தல், }
சேட்டிப்பித்தல், நடப்பித்தல்
சேட்டை, } அக்காள், குணங்கெட்டதொழில், கேட்டைநாள், முறம், மூதேவி, வியாகநாள்
சேஷ்டை, }

சேட்படைகிலை, காதலன்றலைவி
யொடுசேராதுதோழிதடுத்தல்
சேணம், கல்லணை, மெத்தை
சேணவி, அறிவு
சேணுடர், வானோர்
சேணுடு, சுவர்க்கம்
சேணி, ஏணி, தரங்கல், முறை, வித்
தியாதரருலகு
சேணிச்சி, சேணியப்பெண்
சேணியர், நெய்வாரிலோர்பகுதி
சேண், அகலம், ஆகாயம், உயர்ச்
சி, தூரம், நீளம்
சேண்டிரவர், நெய்வார்
சேதகம், சிவப்பு, சேறு
சேதகரம், வெட்டுதல்
சேதபாதம், நட்டம் [பிரிவு
சேதம், இடையூறு, கேடு, நட்டம்,
சேதனம், அறிவு, வெட்டுதல் [மா
சேதனன், அறிவுடையோன், ஆத்து
சேதா, சிவப்புப்பசு, நற்பசு
சேதாம்பல், செவ்வாம்பல்
சேதாரம், அழிவு, தேமாமரம், பொ
ன்னுரை, வெட்சிமரம்
சேதி, ஓர்நாடு
சேதிதம், வெட்டப்பட்டது
சேதித்தல், அறுத்தல், வெட்டல்
சேதிமம், தேவர்கோயில்
சேது, ஓர்தீர்த்தம், சிவப்பு, செய்க
ரை, பாலம்
சேதுநாதன், இராமேச்சுரன்
சேதுபதி, ஓரரசன்
சேதுபந்தனம், அணைக்கட்டு [ரம்
சேதுப்புராணம், சேதுவின்சரித்தி
சேத்தல், சிவத்தல் [லை
சேத்திரக்கோவை, சேத்திரநாமமா
சேத்திரம், உடம்பு, தலம், வயல்
சேத்திரவாசம், தலவாசம்
சேத்து, உறுப்பு, ஐயம், ஒப்பு, கரு
த்து, சிவப்பு, நெருக்கம், மிகுசிவப்பு
சேந்தன், குமரன், திவாகரநிகண்டு
செய்வித்தோன் [ருப்பு
சேந்து, அசோகமரம், சிவப்பு, நெ
சேந்தை, மேற்படாம்
சேபம், இலிங்கம் [டை
சேபாலங்கொட்டை, சேங்கொட்
சேப்பு, சிவப்பு
சேமக்கலம், எதிமணி
சேமக்காரன், ஞுதானகாரன், பொ
ருட்பத்திரம்பண்ணுவோன் [தல்
சேமங்கொள்ளுதல், சேமம்பண்ணு
சேமணி, ஆமணி, சேமக்கலம்
சேமதருமம், சுயதருமம்
சேமத்தேர், உதவித்தேர்
சேமநிதி, புதையல்
சேமப்படைக்கலம், தறுவாய்க்கு
வைத்திருக்கும்படை
சேமப்பொருள், அடைக்கலப்பொ
ருள், சேமமாயிருக்கும்பொருள்,
புதையல்
சேமம், அடக்கம், அரண், இன்பம்,
காவல், காவல்வீடு, புதையல்
சேமம்பண்ணுதல், சேமித்தல், பி
ரேதங்களையடக்கம்பண்ணல்
சேமரம், அழிஞ்சில், சேரான்
சேமறி, எருதும்பசுவும்புணர்தல்
சேமன், தந்தரி
சேமாசாரம், } சேமிக்குந்தன்மை
சேமாதிசயம், }
சேமானைச்சம்பா, ஓர்நெல்
சேமித்தல், காவல்பண்ணிவைத்தல்,
புதைத்தல்
சேமை, } ஓர்செடி
சேம்பு, }
சேம்பை, }
சேயமம், கௌரிபாஷாணம்
சேயம், கரை, கூடப்பட்டது
சேயவன், கந்தன, செவ்வாய்
சேயா, கடுக்காய்
சேயார், பகைவர், பிறர்
சேயிலம், இருப்பை
சேயிழை, ஆபரணம், பெண்
சேயேபசம், மரமஞ்சள்
சேயோன், கந்தன், சிவன்
சேய், இளமை, குமரன், குழந்தை,
சிவப்பு, செவ்வாய், தூரம், நீளம்,
மலை, மூங்கில்
சேய்த்து, தூரம், நீளம்
சேய்நீர், ஓர்விதமருத்துநீர்
சேய்மை, தூரம், நீளம்
சேர, ஒன்றுய் [க்கட்டுதல்
சேரக்கட்டுதல், சேர்த்தல், சேர்த்
சேரமண்டலம், சேரநாடு
சேரமான், சேரன்
சேரலர், பகைவர்
சேரலன், சேரன், பகைவன்
சேரல், கிட்டல், கொழியலரிசி

சேரன், ஓரரசன்
சேரா, கள் [டை
சேராங்கொட்டை, சேராங்கொட்
சேரார், பகைவர்
சேரான், ஓர்மரம், பகைவன்
சேரி, ஊர், தெரு
சேரிடுதல், பிணைத்தல்
சேரிப்பரத்தையர், பொதுவிலிரீக
விலோர்வகையார்
சேருகம், நாகணவாய்ப்புள்
சேருதல், சேர்தல்
சேரும்பாடும், அடிதலைமாறி
சேரை, சிறங்கை
சேர், ஓரளவு, ஓர்நிறை, சேரென்
னேவல், பிணையல்
சேர்க்கை, ஒன்றிப்பு, சேருமிடம்,
சேர்க்குதல், புணர்ச்சி
சேர்தல், அடுத்தல், இணக்குதல், ஒ
ருமித்தல், கிட்டுதல், கூடுதல், பு
ணர்தல்
சேர்த்தல், அடுத்தல், அணிதல், அ
றுத்தல், இணைத்தல், கலத்தல், கூ
ட்டுதல், சமைத்தல், சேகரித்தல்,
சேரப்பண்ணுதல்
சேர்த்தி, சேர்த்திக்கை, } உறவு, சேர்மானம்
சேர்த்துதல், இணைத்தல், சேரப்பண்
ணுதல்
சேர்ந்தகைமை, சேரத்தகுந்தன்மை
சேர்ந்தலை உற்றசினேகம, ஒன்றிப்பு
சேர்ந்தவன், அடுத்தவன்
சேர்ந்தார், உற்றார்
சேர்ந்தார்க்கொல்லி, நெருப்பு
சேர்பு, சேர்மானம், வீடு
சேர்ப்பன், நெய்தனிலத்தலைவன்
சேர்ப்பு, இறங்குதுறை, சேர்க்கப்
படுவது
சேர்ப்பூட்டு, சோடு
சேர்மானம் ஒன்றிப்பு, கூட்டு
சேர்விடம், சேருமிடம், சேர்மான
ம், மனிதர்படுக்கை
சேர்வு, திரட்சி, மருதநிலத்தூர், வீடு
சேர்வை, ஓர்மருந்து, கூட்டம், சே
ர்ப்பு, சேர்மானம், சேனை
சேர்வைக்காரன், சேனைத்தலைவன்,
போர்ச்சேவகன்
சேர்வைக்கால், உண்கலமுதலியவை
க்குத்தாள்
சேலகம், மூத்தக்காசு
சேலப்பிரட்சாளகன், வண்ணான்
சேலம், ஓரூர், புடைவை
சேலியால், இலாமிச்சை
சேலேகம், சந்தனம், சிந்தூரம்
சேலை, அசோகு, சீலை
சேலோதம், சந்தனம்
சேல், கயல்
சேவகம், சேவகத்தொழில், சோம்
பு, துயில், யானைதுயிலிடம், வண
க்கம், வீரம், வேலை
சேவகன், ஐயன், பணிவிடைகாரன்,
பேயுள்ளி, வீரன்
சேவகன்பூடு, காந்தள், சிறுபுள்ளடி,
சிற்றமட்டி
சேவதி, குபேரன்திரவியம்
சேவல், காவல், பறவையினாண்
சேவற்கத்தி, சாவற்போருக்குக்கட்
டுங்கத்தி
சேவற்கொடியோன், ஐயன், கந்தன்
சேவற்பண்ணை, ஓர்பூமரம்
சேவனம், சேவகம், தைத்தல்
சேவனை, சேவிப்பு
சேவனைகாரர், ஊழியஞ்செய்வோர்,
வழிபடுவோர்
சேவாலங்கொட்டை, கேர்வாளம்
சேவிதம், சேவகம் [படுதல்
சேவித்தல், ஊழியஞ்செய்தல், வழி
சேவுகம், சேவகம்
சேவை, ஊழியம், வழிபடுதல்
சேவையூர், சிதம்பரம்
சேறல், எழுச்சி, செல்லல்
சேறுடல், செள்ளலாடுதல்
சேறு, இனிமை, கள், குறிப்பு, செ
ள்ளல், தித்திப்பு, திருவிழா
சேற்கண்ணி, அரிதாரம்
சேற்பம், சிலேற்பனம்
சேற்பனகரம், ஓர்காய்ச்சல்
சேற்பனம், சேற்றுமம், } சிலேட்டுமம்
சேனம், பருந்து
சேனன், பிறப்பிலேசிலாக்கியமுடை
யோன்
சேனு, ஓர்பூடு, விலாங்குமீன்
சேனுக்கம், படையுறுப்பு
சேனுசமுத்திரம், பெருஞ்சேனை
சேனுசரன், படைவீரன்
சேனுபதி, படைத்தலைவன்

சேனுநியன், } படைத்தலைவன்
சேனுபதி, }
சேனுதிராயன், கந்தன், சேனுதிபதி
சேனுபத்தியம், தானுபத்தியம்
சேனுமுகம், படையினேர்தொகை, அஃதுபதாதிமூன்றுகொண்டது, முற்படை
சேனுவரையர், ஓராசிரியர்
சேனுவு, தகரை [வன்
சேனுனியன், குமரன், படைத்தலை
சேனை, ஆயுதம், கடைவீதி, படை, மிகுதி
சேனைத்தலைவன், படைத்தலைவன்

## சை

சை, இகழ்ச்சிக்குறிப்பு, ஓரெழுத்து
சைகதம், மணல், மணற்கரை
சைகன், ஒழுக்கந்தவறினபார்ப்பனப்புத்திரன்
சைகை, } பயில்
சைக்கினை, }
சைங்கம், } சிங்கம்
சைங்கியம், }
சைங்கிகேயம், இராகு
சைசவம், இளமை, பதினாறுவயதிற்குள்ளானபருவம்
சைதன்னியதரிசனம், தானுந்தலைவனுமொன்றெனக்காண்டல் [வுள்
சைதன்னியம், அறிவு, ஆத்துமா, கட
சைதிதம், பிரம்பு
சைதியமுகம், கமண்டலம்
சைத்தியம், இறப்புக்கல்வெட்டு, குளிர்மை, பலிபீடம்
சைத்திரகம், சித்திரைமாதம்
சைத்திரம், சித்திரைமாதம், வெற்றி
சைத்திராதம், குபேரனந்தனம்
சைத்திராதன், வீரன்
சைத்திராவலி, சித்திராபூரணை
சைத்திரி, சித்திரைமாதம், யாகமிருபத்தொன்றினென்று
சைத்திரிகம், சித்திரைமாதம்
சைத்திரியஞானம், சித்தஞானம், பேரறிவு
சைத்திரியம், தெளிவு
சைந்தவம், இந்துப்பு, குதிரை, தலை
சைமானம், வெகுமானம்
சைமினி, உத்தரமீமாமிசநூலாசிரியன், ஓரிருடி, யமலோகம்
சைமினிநகரோன், நமன்
சைமினிநகர், இயமலோகம்
சையகிரி, ஓர்மலை
சையம், கல், செல்வம், மலை
சையெனல், இகழ்ச்சிக்குறிப்பு
சையை, சைகை
சையோகம், கூட்டம், புணர்ச்சி
சையோகித்தல், கூடுதல்
சையோகை, சத்தியினுற்சிவத்துக்குண்டாகுந்துன்பம்
சையோத்திகம், அயிக்கம்
சைரிகம், கலப்பை
சைரிகன், உழவன், ஏர்மாடு
சைரிபம், எருது, எருமை
சைலகம், மலையிருவேலி
சைலசிருங்கம், மலைமுடி
சைலதரன், கிருட்டிணன்
சைலபதி, இமயமலை
சைலபித்தி, கல்லுளி
சைலம், சேலை, மலை
சைலாந்திரம், மலைக்குகை
சைவகுரு, ஆகமமார்க்ககுரு
சைவசமயம், சிவசமயம்
சைவசாத்திரம், சிவாகமம்
சைவசித்தாந்தம், ஓர்நூல், சைவசமயத்தெளிவுண்மை
சைவநூல், சிவாகமநூல்
சைவபூடணம், ஓர்நூல்
சைவம், சிவசமயம், அஃது உட்சமயமாறினென்று, பதினெண்புராணத்தொன்று
சைவர், சிவசமயத்தார், விசேடதீட்சைபெற்றோர்
சைவலம், பாசி
சைவாகமம், சிவாகமம்
சைவாசாரம், சிவசமயவொழுங்கு
சைவியம், சைவத்திற்குரியது
சைனர், சமணர், சீனர்
சைனன், அருகசமயத்தவன், அருகன், புத்தன்
சைனுபத்தியம், சேனுபதித்துவம்

## சொ

சொகுசா, உயர்ந்தசெம்பு
சொகுசு, அழகு, சௌக்கியம்
சொக்கட்டான், ஓர்சூது
சொக்கட்டான்கவறு, பாச்சிகை

சொக்கட்டான்காய், சொக்கட்டாருடலைவக்குங்கருவி
சொக்கட்டான்பந்தல், சொக்கட்டான்மனைபோற்செய்தபந்தர்
சொக்கட்டான்பாச்சிகை, சொக்கட்டான்கவறு
சொக்கட்டான்மனை, சொக்கட்டான்விளையாடுமறைப்பலகை முதலியன [டு
சொக்கதேவன், கூகை, கூகைக்கட்
சொக்கநாதன், சிவன்
சொக்கப்பனை, விளக்கீட்டிலெரிக்குமோர்செய்கைவிருட்சம்
சொக்கப்பையன், வேலைகாரன்
சொக்கம், அழகு, கலப்பின்மை, களவு, கெம்புக்கல், தூய்மை, நன்மை, மேன்மை
சொக்கரை, குறை
சொக்கலி, ஓர்செடி
சொக்கலிங்கன், சொக்கநாதன்
சொக்கறை, சொக்கரை
சொக்கன், சிவன், சொக்கப்பையன்
சொக்கா, ஓர்வகையங்கி
சொக்காவி, ஓர்பூடு
சொக்கிடுவித்தை, களவுபண்ணமயக்கும்வித்தை
சொக்கு, அழகு, அறியாமை, கண்தூக்கம், கதுப்பு, சொக்கென்னேவல், சோர்வு, பொன், மயக்கு
சொக்குப்பொடி, அயர்ந்தநித்திரையாகும்படிமேவிற்போடும்பொடி
சொக்குவித்தல், மயக்குதல்
சொக்குவித்தை, மயக்குவித்தை
சொச்சம், குறை, பணவட்டி, மாசின்மை, மிச்சம்
சொச்சோர், சொற்சோர்
சொடக்கு, கடுகு, கிலுகிலுப்பை
சொடித்தல், குறைத்தல்
சொடுகு, சொறி, பொடுகு
சொட்டா, ஓர்வகைப்பட்டையம்
சொட்டு, குட்டு, சொட்டென்னேவல், திவலை, துண்டு
சொட்டுதல், அனுப்புதல், இடித்தல், குட்டுதல்
சொட்டுத்தண்டம், இடுவந்தி [ல்
சொட்டுப்போடுதல், திவலைவிழுத்த
சொட்டை, ஓராயுதம், கோணல், நொன்னை

சொட்டைத்தலை, வெண்டலை
சொண்டறை, சொண்டிலி
சொண்டி, உத்தியோகம், கடனுறுதி, வேர்க்கொம்பு
சொண்டு, அற்பன், ஆயுதநுனி, உதடு, உத்தியோகம், கனத்தவிளிம்பு, நிந்தை, பறவைமூக்கு
சொண்டுக்கதை, கோட்கதை, முகமன்கதை
சொண்டுத்தீன், உருசியானசிறுதீன்
சொண்டுபண்ணல், இகழ்ச்சிபண்ணல்
சொதை, ஐசுவரியம்
சொலிதம், சுகம்
சொத்தலி, பனங்காயின்பொய்க்கொட்டை
சொஸ்தானம், உயிர்த்தெழுதல், சரிபிடம்
சொத்தி, முடம்
சொத்திரி, } குலஸ்திரி
சொஸ்திரி, }
சொத்து, உடைமை, குறை, பசை
சொத்துவம், உரிமை
சொத்தை, கதுப்பு, சூத்தை
சொந்தம், சுயம்
சொப்பனம், இரண்டாமவத்தை, கனு
சொப்பனுவத்தை, ஓரவத்தை [ன்
சொம், உடைமை, உரிமைப்பொரு
சொம்மானி, உரிமைக்காரன்
சொயம், சுயம்
சொயம்பு, சுயம்பு
சொயாதீனம், சுயாதீனம்
சொரங்கம், கச்சோலம்
சொரசத்தோரசி, இலவங்கம்
சொரடு, இரும்பு, வளையற்றடி
சொரணை, சொருணை
சொரிகுரும்பை, ஓர்நெல்
சொரிதரல், சுழலல், பொழிதல்
சொரிதல், உதிர்தல், பொழிதல், மிகவீதல்
சொரிவு, உதிர்வு, பொழிவு
சொருகுதல், செருகுதல்
சொருணை, சுவரணை
சொருணைகேடு, உணர்ச்சியின்மை
சொரூபஞானம், பரமஞானம்
சொரூபம், உடம்பு, பரம், வடிவு, விக்கிரகம்
சொரூபன், கடவுள்

சொரூபானந்தம், ஓர்வேதாந்தநூல்
சொரூபி, உரூபி, சுரூபி
சொலித்தல், } இடந்திடல், சுவா
சொலித்திடல், } லித்தல், பிரகாசி
த்தல் [ல்
சொலிப்பித்தல், சொலிக்கச்செய்த
சொலிப்பு, சுவாலை, பிரகாசம்
சொலியன், முடக்கொத்தான்
சொலுசொலுத்தல், பொலுபொ
லுத்தல் [ப்பு
சொலுசொலுப்பு, பொலுபொலு
சொலுசொலெனல், பொலுபொலெ
னல்
சொல், எழுத்திளுைச்சொல், க
ட்டளை, கள், செந்நெல், செந்நெற்
கதிர், சொல்லென்னேவல், நெல்,
புகழ், பேச்சு
சொல்லணி, } சொற்றொடை
சொல்லலங்காரம், } வகைச்சிறப்பு
சொல்லாதசொல், அசப்பியம், இ
ரகசியம், வசை
சொல்லானந்தம், சொற்குற்றம்
சொலவிக்கொள்ளுதல், எடுத்துப்பே
சுதல், பிணைநிற்றல், பொறுப்புச்
சொல்லுதல்
சொல்விலக்கணம், சொல்வினியல்பு
சொல்லின்பம், சொற்சுவை [ழிதல்
சொல்லுதல், புலமைபாடுதல், மொ
சொல்லுதவி, வாயுதவி
சொல்லுரை, சொற்பயன்
சொல்லுவான்குறிப்பு, சொல்வோ
ன்கருத்து
சொல்லுறுதி, மெய்வார்த்தை
சொல்லேருழவர், புலவர், மந்திரிகள்
சொல்லொடுபொருள், சொற்றொறு
ம்பண்ணும்பயன்
சொல்வரை, சொற்பகுதி
சொல்வளம் சொற்சாதுரியம், சொ
ன்னயம்
சொல்வன்மை, சொல்லுறுதி, சொ
ற்சாதுரியம், வாக்குவல்லபம்
சொல்விளம்பி, கள்
சொளுசொளுத்தல், நீர்ப்பிடிப்பா
யிளகிக்காட்டல்
சொள்ளல், குறைவு, குத்தை [த்து
சொள்ளை, பழுதுபட்டது, புழுவரித்
சொறி, குட்டம், சொறியென்னே
வல், தினவு

சொறிகட்டை, ஆவுரிஞ்சுதறி
சொறிக்கல், சுக்கான்கல், தவளைக்க
ல், பஞ்சட்கல்
சொறிக்கிட்டம், கிச்சுக்கிட்டம்
சொறிதல், அரித்தல், பிறாண்டல்
சொறிமண்டலி, ஓர்பாம்பு
சொறியன், தவளை
சொறிவு, தினவு
சொற்கப்பனை, சொக்கப்பனை [லை
சொற்கம், சுவர்க்கம், மாணிக்கம், மு
சொறகலகம், வாக்குவாதம், விபரீ
தம்
சொற்காத்தல், சொற்றவறாமை
சொற்குறி, சூதபாஷாணம்
சொற்குற்றம், சொற்பிழை
சொற்சக்தி, சொற்புணர்ச்சி [ம்
சொற்சாதுரியம், வாக்குவிற்பன்ன
சொற்சித்திரம், கருவானபேச்சு
சொற்சிமிட்டு, சொற்சாதுரியம்
சொற்சீரடி, தனிகளொன்றும்பலவு
மடுத்துவருவது
சொற்சுவை, சொல்லின்பம்
சொற்சோர், சொல்விழுக்கு
சொற்பம், அற்பம்
சொற்பயன், சொற்பொருள்
சொற்பனம், சொப்பனம்
சொற்பொருள், சததார்த்தம்
சொற்பொருள்விரித்தல், ஓர்யுத்தி,
அஃது சொற்பொருள்விளக்கஉ
ருபுமுதலானவற்றைவிரித்துச்சொ
ல்லல்
சொற்றல், சொல்லல்
சொற்றுணை, சொல்லுதவி
சொற்றொடர்நிலைச்செய்யுள், ஓர்பி
ரபந்தம், அஃது சொல்லாற்று
டர்ந்துவருவது
சொறுகம், உத்தாமணி
சொன்மாலை, ஏற்றமொழி
சொன்றி, சுக்கு, சோறு
சொன்னகாரர், தட்டார்
சொன்னசீரம், கரும்பு
சொன்னதானம், இரணியதானம்
சொன்னபுட்பம், சுவணபுட்பம்
சொன்னபேதி, ஓர்மருந்து
சொன்னமயம், பொன்னிறம்
சொன்னமாக்கி, பவளபாஷாணம்
சொன்னம், பொன்
சொன்னல், இரும்பு, சோளம்

# சோ

சோ, அரண், உமை, ஓரெழுத்து, வியப்புச்சொல்
சோகம், உண்டை, ஒட்டகம், சோம்பல், சோர்வு, துன்பம், தொடை, பஞ்சபாணத்தவத்தையினொன்று, அஃது வெறுப்புந்துய்ப்பவற்றைவிட்டதுமாயிருத்தல்
சோகரிகன், வேட்டைகாரன்
சோகரியம், } சௌகரியம்
சோகரீயம், }
சோகாக்கினி, மிகுதுயர் [ங்குதல்
சோகாத்தல், துக்கப்படுதல், வத
சோகாபனோதன், ஞானாசாரியன்
சோகாப்பு, துயரம்
சோகாரி, கடம்பு
சோகி, பலகறை, விடவைத்தியன்
சோகித்தல், அவசப்படல், துக்கப்படுதல்
சோகு. பிசாசம்
சோகை, ஓர்நோய்
சோகையன், காமாலையன் [ங்கு
சோங்கம், அகிலமரம், கிச்சிலிக்கிழ
சோங்கு, ஓர்மரக்கலம், குருகு, துப்பாக்கிமுதலியவற்றினடி, மறத்தல்
சோங்குவெட்டு, குங்வெட்டு
சோசகம், மரப்பட்டை
சோசனம், உள்ளி
சோசாக்கினி, மிகுதுயர்
சோசியம், சோதிடசாத்திரம்
சோசியர், சோதிடகாரர்
சோச்சி, சோறு
சோச்சியகன், கீழ்மகன் [ர்
சோடசம், பதினாறு, மரப்பட்டைநா
சோடசவுபசாரம், பதினாறுவகைவழிபாடு, அஃது அடைகாய்தரல்-அமுதமேந்தல்-ஆசமனநீர்தரல்-ஆடைசார்த்தல்-கருப்பூரதீபமேந்தல்-கால்கழுநீர்தரல்-கைகழுநீர்தரல்-தவிச்சித்தல்-தெய்வைபூசல்-நறும்புகைகாட்டல்-நீராட்டல்-மஞ்சலரிசிதூவல்- மந்திரமலரானருச்சித்தல்-மலர்சார்த்தல்-முப்புரிநூறரல்-விளக்கிடல் [ன்று
சோடசி, யாகமிருபத்தொன்றினொ
சோடசோபசாரம், சோடசவுபசாரம்
சோடணம், உமிழ்துகுடித்தல்
சோடம், } சந்தோஷம், மார்ச்சட்டை [டன்
சோஷம், }
சோடன், கீழ்மகன், சோம்பன், மூ
சோடித்தல், அலங்கரித்தல்
சோஷித்தல், களைத்தல், வற்றுதல்
சோடிப்பு, } அலங்காரத்திற்குவேண்டுவன
சோடினை, }
சோடு, இரண்டு, கவசம், சரியொப்பு, தொடுதோல், பாதகுறடு
சோடுகட்டுதல், சரிவரவிணைத்தல், குதாட்டத்தொன்று
சோடை, சடைந்தது, சடைவு
சோஷை, திரீ
சோட்டா, வளைதடி
சோட்டை, ஆசை
சோணகிரி, அருணாசலம்
சோணங்கி, ஓநாய்
சோணம், இரத்தம், ஓர்யாறு, கடல், சிவப்பு, செங்கரும்பு, செந்தூரம், தீ
சோணகம், பெருவாகை
சோணசலம், அருணசலம்
சோணாடு, சோழநாடு
சோணாறு, விருத்தம் [ட்டினம்
சோணிதபுரம், அசுரர்க்குமோர்ப
சோணிதம், இரத்தம், சிவப்பு, சுரோணிதம், மஞ்சள்
சோணேசன், சிவன்
சோணை, அருகு, ஓர்பட்டினம், ஓர்மலை, காதினருகு, புகையிலைமுதலியவற்றினடிப்புறம் [பண்ணல்
சோதகம, கழிக்குந்தொகை, சுத்தி
சோதகர், ஏழ்தலைமுறையளவுமிறந்தபிதா, எழுதலைமுறையிற்புத்திரர்
சோதகும்பம, சுத்தோதகும்பம்
சோதரம், சகோதரம்
சோதரன், சகோதரன்
சோதரி, சகோதரி
சோதனம், சுத்தஞ்செய்தல், சோதித்தல், திரிகை
சோதனை, அளவு, ஆராய்வு, கட்டளை, சோதிப்பு, பிரமாணம்
சோதி, அருகன், ஒளி, ஓர்நாள், கடவுள், கருப்பூரம், சாதிலிங்கம், சிவன், சூரியன், சோதியென்னேவல், தீ, பூசாகம், வான்மீன், விட்டுணு
சோதிக்குட்சோதி, கடவுள்

சோதிக்குண்மணி, முத்து
சோதிசக்கரம், துருவசக்கிரம்
சோதிடகாரர், சோசியர்
சோதிடசாத்திரம், } கலைஞானமறு
சோதிடநூல், } பத்திலொன்றி லொன்று
சோதிடநூலோர், எண்கலைஞர்
சோதிடம், சோதிடசாத்திரம், நன்னிமித்தம்
சோதிடர், சோசியர்
சோதிடவாதம், சோதிடவிசுவாசமார்க்கம்
சோதிடவாதி, சோதிடமார்க்கி
சோதிதம், அறிவிக்கப்பட்டது, நியமிக்கப்பட்டது
சோதித்தல், ஆராய்தல்
சோதிநாயகன், கடவுள்
சோதிநீச்சடம், முத்துச்சிப்பி [ள்
சோதிப்பிளம்பு, ஒளிப்பிளம்பு, கடவு
சோதிமண்டலம், வானசோதிகளின் மண்டலம் [ளி, வாலுளுவை
சோதிமயம், ஒளியுருவம், மிக்கவொ
சோதிராத்திரி, நடுராத்திரி
சோதிரூபம், ஒளிவடிவு
சோதிவிருட்சம், இரவெரிமரம்
சோதினி, செத்தை, துடைப்பம்
சோத்தி, அத்தசாமம், சுழுத்தி
சோத்தியம், அதிசயம், கழிக்கப்படுந்தொகை, சுத்தம், சோதிக்கப்படுவது, தவறு, வினா
சோத்திரம், காது
சோந்லதை, உடந்தை, தடை
சோபகிருது, ஓராண்டு
சோபதானம், முதற்காரணம்
சோபம், அழகு, கள், சோம்பல், சோர்வு, தாமதகுணத்தொன்று, பத்துக்கோடிகோடாகோடி, பிரலை
சோபனம், அழகு, சந்தோஷம், சுபம், தாமரை, நித்தியயோகத்தொன்று, அஃது நன்மை, வாழ்த்து
சோபாவிலை, அடுப்பு, சுவாலையுள்ளது, விரிநூறு
சோபானம், கற்படி, தாழ்வாரம், நன்னிமித்தம், வசதி
சோபிதம், சௌந்தரியம், பிரலை
சோபித்தல், ஒளிசெய்தல், சோர்தல்
சோபை, அழகு, ஒளி
சோப்பம், சோர்வு
சோப்பறுதி, மிகுவாட்டம்
சோப்பி, இச்சோப்பி
சோப்பு, அடி, சோப்பென்னேவல்
சோப்புதல், அடித்தல், வாட்டுதல்
சோமக்கொடி, ஓர்வகையாகத்திற்கட்டுங்கொடி
சோமசுந்தரன், ஓர்பாண்டியன், சிவன்
சோமசூரியவமிசம், சந்திரகுலமுஞ்சூரியகுலமுங்கலந்தவமிசம் [வன்
சோமசேகரன், ஓர்பாண்டியன், சி
சோமதாரி, இக்துப்பு, சிவன்
சோமதாரை, ஆகாயம்
சோமநாதன், சிவன்
சோமநாதி, ஓர்பெருங்காயம்
சோமபந்து, ஆம்பல்
சோமபானம், மதுபானம்
சோமமண்டலம், சந்திரமண்டலம்
சோமம், ஆதாயம், ஓர்பூடு, ஓர்யாகம், கஞ்சி, கள் [ன்
சோமலிங்கன், சோமாரணியேசுர
சோமவல்லி, ஓர்கொடி
சோமன், அட்டவசுக்களிலொருவன், அமுதம், ஓர்வள்ளல், கருப்பூரம், காற்று, சந்திரன், சிவன், அசு, நமன், பன்னிரண்டுமுழமுள்ளபுடைவை, மலை
சோமன்சோடு, அங்கவத்திரமுமுடையும்
சோமாக்கியம், தாமரை
சோமாரணியம், ஓர்வனம்
சோமாறுதல், சோர்மாறுதல்
சோமாற்று, சோர்மாற்று
சோமுகன், ஓரசுரன்
சோமேசுரன், சிவன் [வசூரி
சோம்பல், அழுங்கல், சோம்புதல்,
சோம்பறை, சோம்பு
சோம்பன், } சோம்பறைகாரன்
சோம்பி, }
சோம்பு, அழுங்கல், சோம்பென்னேவல், தாமதகுணத்தொன்று, மடி, அஃது, மாயயாக்கை பதினெண்குற்றத்தொன்று
சோம்புதல், மடியாதல், வாட்டங்கொள்ளுதல்
சோம்பேறி, சோம்பி

சோய்வு, சோர்வு
சோரகவி, ஒருவர்பாவையெடுத்துச்சிலமாற்றுதல்செய்துவேறொருவர்க்குரைப்பவன்
சோரகன், கள்வன்
சோரக்கதண்டு, கருவண்டு
சோரணம், விடுதல் [பொருள்
சோரத்திரவியம், கொள்ளையிட்ட
சோரத்திரீ, சோரஸ்திரீ, } விபசாரி, வேசி
சோரநாசம், சோரபஞ்சநம், } கள்வர்சேதம்
சோரபயம், கள்வர்பயம்
சோரபுத்திரன், விபசாரபுத்திரன்
சோரபுத்திரி, விபசாரபுத்திரி
சோரபுருஷன், கள்ளப்புருஷன்
சோரப்போடுதல், ஆறப்போடுதல், பின்போடுதல்
சோரமார்க்கம், தூர்த்தத்தனம்
சோரமிடுதல், களவெடுத்தல்
சோரம், களவு
சோரம்போதல், களவுபோதல், கற்பழிதல், தவறுதல்
சோரர், திருடர்
சோரல், சோருதல், தளர்தல்
சோரவிடுதல், இளகவிடுதல், காரியத்தைப்பின்போடுதல், தவறவிடுதல் [தேவதை, திருடன்
சோரன், ஆட்டுக்குட்டி, ஓர்வருட
சோராவாரி, கொள்ளை
சோரி, இரத்தம், மழை
சோரிகை, களவு
சோருதல், வாடுதல்
சோர், சோரென்னேவல், சோர்வு
சோர்ச்சி, அயர்ச்சி, சோகம், தளர்வு
சோர்தல், தவறுதல், தளர்தல், பொசிதல், வதங்குதல், வாடல், விழுதல
சோர்த்தல், கவர்தல்
சோர்மாறுதல், நெகிழவிடுதல்
சோர்மாற்று, நெகிழ்ச்சி
சோர்வாதம், ஓர்நோய்
சோர்வு, அயர்ச்சி, களவு, தவறு, தளர்வு, நிறையழிவு, நெகிழ்வு, மறதி, வதக்கம்
சோவி, தொந்தறை, மார்க்கச்சு
சோலை, தோப்பு, மரச்செறிவு
சோலைமலை, ஓர்மலை
சோழகக்கச்சான், தென்மேற்றிசை, தென்மேற்றிசைக்காற்று
சோழகக்கொண்டல், தென்கீழ்த்திசை, தென்கீழ்த்திசைக்காற்று
சோழகம், தெற்கு, தென்காற்று [ம்
சோழங்கபாஷாணம், ஓர்பாஷாண
சோழமண்டலம், சோழம், } சோழதேயம், அஃது தேயமைம்பத்தாறிறொன்று
சோழன், தமிழ்நாட்டுமூவேந்தரிலொருவன் [டகம்
சோழியக்கடகம், மன்னன்றுங்க
சோழியர், சோழியவேளாளர், } ஓர்சாதியார்
சோழியன், ஓர்வேளாளன், மண்வெட்டி
சோளகம், சௌளம்
சோளம், ஓர்பயிர்
சோளறு, ஓர்பை
சோளன், சோளம்
சோணி, சோணிகை, } ஓர்கூடை
சோறு, அன்னம், கற்றாழஞ்சோற்றிமுதலியன, பரணிநாள், பூஞ்சுண்ணம்
சோறூட்டு, அன்னப்பிராசனம்
சோற்றுலாத்தி, ஓராலாத்தி
சோற்றி, வயிரமற்றது
சோற்றுக்கற்றலை, ஓர்மீன்
சோற்றுப்பதம், காய்கன்பழுக்கத்தக்கபருவம்
சோனகம், தேயமைம்பத்தாறிறொன்று, பதினெண்பாடையிறொன்று
சோனகர், துலுக்கர்
சோனைமாரி, சோனைவாரி [முகில்
சோனைமேகம், பெருமழைபொழியு
சோனைவாரி, பெருமழை, விடாமழை
சோனை, சொரிதல், திருவோணநாள், விடாமழை
சோனைமழை, பெருமழை
சோன்மதன், பித்தன்

## சௌ

சௌகருத்திகன், பள்ளியெழுச்சிபாடுவோன்
சௌகந்தகம், சுகந்தம்
சௌகந்தி, கந்தகபாஷாணம்
சௌகந்திகம், வெள்ளாம்பல்

சௌகந்தியம், சுகந்தம்
சௌகம், கிளி, துக்கம்
சௌகரியம், சுகம், சோகரியம்
சௌகாத்தியம், சௌகிருத்தியம், } சிநேகம்
சௌக்கியம், சந்தோஷம், சுகம், வ[சதி
சௌசம், சுத்தம்
சௌசவிதி, சுத்தஞ்செய்விதி
சௌசன்னியம், இரக்கம், சிநேகம், பட்சம்
சௌசன்னியன், பட்சமுடையோன்
சௌசாசாரம், ஆசவுசநிவிர்த்திசெய்விதி
சௌசி, சௌசிகன், } தையற்காரன்
சௌசேயன், வண்ணான்
சௌண்டி, ஓர்பிதிர், திப்பிலி
சௌண்டிகரணம், சிராத்தக்கிரியையி லொன்று
சௌண்டிகர், கள்விற்போர்
சௌதம், சாலை, மலிவு, வெள்ளி
சௌதாகிரி, குதிரைவியாபாரி
சௌதாகிரிக்குதிரை, விலைக்குதிரை
சௌதாமினி, மின்
சௌதாயம், நன்கொடை, பந்தய[ப்பொருள்
சௌதாயிகம், சீதனம்
சௌத்திரன், சூத்திரன்
சௌத்திராமணி, யாகமிருபத்தொன்றி லொன்று
சௌந்தரமுகம், பூரித்தமகிழ்ச்சியான்மலர்ந்தமுகம்
சௌந்தரம், அழகு
சௌந்தரலகிரி, ஓர்நூல்
சௌந்தரன், அழகன், சிவன்
சௌந்தரி, அழகி, பார்வதி
சௌந்தரிகம், சௌந்தரியம், } சௌந்தரம்
சௌந்தரியவதி, அழகுள்ளவள்
சௌந்தரேசன், சிவன்
சௌபஞ்சனம், புனன்முருங்கை
சௌபன்னம், சுக்கு, மரகதம்
சௌபாக்கியம், நித்தியயோகத்தொன்று
சௌமனசியம், பூரணம்
சௌமன், புதன்
சௌமாரம், இளமை
சௌமித்திரன், இலக்குமன்
சௌமித்திரை, சுமித்திரை
சௌமிய, ஓராண்டு
சௌமியதாது, கோழை
சௌமியத்துவம், சௌமியம், } அழகு, சாந்தம், மனவொடுக்கம்
சௌமியர், சாந்தர், முனிவர்
சௌமியன், அருகன், சாந்தன், பன்னிருருத்திரரிலொருவன், புதன்
சௌமேருகம், பொன்
சௌரகன், நாவிதன்
சௌரமாதம், சௌரமானம், } சூரியமாதம்
சௌரம், அட்டாதசவுபபுராணத்தொன்று, க்ஷுரம், சூரியமாதம், சௌளம், நாள்
சௌரவம், வாசனை
சௌரன், சனி, சூரியன், சோரன்
சௌராடி, சௌராட்டிரம், } ஓர்பண்
சௌரி, கருடன், கன்னன், சனி, திருமால், துர்க்கை, நமன்
சௌரிகம், மோக்கம்
சௌரிகன், கள்விற்போன்
சௌரிகை, சோரம்
சௌரியப்பிரதாபம், இராசமகிமை
சௌரியம், களவு, பலம், வீரம்
சௌரியவான், சூரன், பலசாலி, வீரவான்
சௌரியன், சௌரியவான்
சௌரியார்ச்சிதம், சோரத்திரவியம்
சௌவீரம், இரத்தைக்கனி, ஓர்மருந்து
சௌளகருமம், குடுமிச்சடங்கு
சௌளகம், சௌளம், } மயிர்கழித்தல்
சௌனகன், ஓரிருடி[லொன்று
சௌனகீயம், உபநிடதமுப்பத்திர
சௌனிகன், ஊன்விற்போன், புலைஞன்

## ஞ

ஞண்டு, கற்கடகவிராசி, நண்டு [று
ஞமகண்டன், காணுக்கிரகத்தொன்
ஞமலி, கள், நாய், மயில்
ஞமன், யமன்
ஞராலுதல், ஒலித்தல்
ஞரல்வு, ஒலி
ஞலவல், மின்மினிப்பூச்சி
ஞரு, மயிர்குரல்

## ஞா

ஞாங்கர், இடம், பக்கம், முன்பு, மேல், வேல்
ஞாஞ்சில், கலப்பை, மதிலுறுப்பு
ஞாட்பு, கூட்டம், படை, பாரம், போர், வலி
ஞாணோதை, ஞாண்டெறிக்குமொலி
ஞாண், கயிறு, வில்ஞாண்
ஞாதசித்தாந்தம், அறிவிற்றேற்றம்
ஞாதம், அறியப்பட்டது
ஞாதர், அறிவுடையோர், நாதர்
ஞாதி, சுற்றம், தாயத்தான்
ஞாதிகருமம், சுற்றத்தார்க்குச்செய்யுங்கருமாதி
ஞாதிகள், தாயத்தார்
ஞாதியர், தாயத்தார்
ஞாதுரு, அறிவு, காண்போன்
ஞாத்தல், கட்டுதல்
ஞாபகக்கருவி, அறிவிற்குத்தாரகமாயகரணங்களும்பொறிகளும்
ஞாபகத்துணைக்கருவி, அறிவிற்குக்காரணமாயகருவி, அஃது கண்-செவி-மூக்கு-மெய்-வாய்
ஞாபகநிமித்தகருவி, ஆத்துமா
ஞாபகப்படுதல், நினைவுகூருதல்
ஞாபகப்படுத்தல், அவதானப்படுத்தல், நினைப்பித்தல்
ஞாபகமுதற்கருவி, சிவசாட்சி
ஞாபகம், அரும்பொருள், அறிவு, இலக்கியவெடுத்துக்காட்டு, நினைவு, புறனடை [யது
ஞாபகவேது, அறிவிற்குக்காரணமா
ஞாபகி, நினைப்பாளி
ஞாயம், நியாயம்
ஞாயில், மதிலுறுப்பு
ஞாயிறு, ஓர்வாரம், சூரியன்
ஞாயிறுதிரும்பி, சூரியகாந்தம்
ஞாலமாது, ஊமத்தை, பூமதேவி
ஞாலமுண்டோன், திருமால்
ஞாலம், பூமி
ஞாலல், ஞாலுதல், } தூங்குதல்
ஞாழல், குங்குமமரம், குங்குமம், கோங்குமரம், சங்கபுட்பம், பலிணி, பொன்னாவிரை, மயிர்க்கொன்றை, வைரம்
ஞாளி, கள், நாய்
ஞாளிகம், வள்ளைக்கொடி
ஞாளிமூர்த்தி, வயிரவன்
ஞாற்சி, தூங்குதல்
ஞானகாண்டம், வேதத்திலோர்பகுதி
ஞானகாண்டிகர், மூவகைப்பக்குவரிலொருவர்
ஞானகுரு, காரணகுரு, பரமகுரு
ஞானக்கண், தேவஞானம், பிரத்தியட்சப்படாதவற்றையறியத்தகுமறிவு [டாகுங்குறி
ஞானக்கலை, ஞானசாதனத்தாலுண்
ஞானக்காட்சி, சைதன்னியதரிசனம்
ஞானசத்தி, ஞானசத்தி [ன்று
ஞானசமாதி, ஞானநிட்டைபெறு
ஞானசரிதர், ஞானிகள்
ஞானசாதனம், ஞானசாதனை, } ஞானப்பயிற்சி
ஞானசாத்திரம், ஞானநூல்
ஞானசுகம், பேரின்பசந்தோஷம்
ஞானசூட்சம், பரமரகசியம்
ஞானசைவம், ஓர்சைவம் [காலம்
ஞானதிசை, ஞானசாரத்தினிற்குங்
ஞானதிட்டி, ஞானதிருட்டி, } ஞானக்கண்
ஞானதீட்சை, ஞானவுபதேசம் [தா
ஞானத்தகப்பன், ஞானஸ்நானப்பி
ஞானத்தாய், ஞானஸ்நானத்தாய்
ஞானஸ்தானம், ஞானஸ்நானம், } அகஸ்நானம், கிறிஸ்துமார்க்கத்தோர்சடங்கு
ஞானத்திற்கிரியை, ஞானத்திற்சரிதை, ஞானத்தில்ஞானம், ஞானத்தில்யோகம், } சைவநிலைபதினாறுபாதத்துளொன்று
ஞானநாயகன், கடவுள்
ஞானநிட்டை, ஞானானுட்டிப்பு
ஞானநிலை, ஞானமார்க்கம்
ஞானநூல், ஞானசாத்திரம்
ஞானபரன், கடவுள், குரு
ஞானபாகை, வேதநூற்பொருள்களிலொன்று
ஞானபாதம், நான்குபாதத்தொன்று, அஃது சிவனுஞ்சீவனுமொன்றெனக்கண்டுநிற்கை [ந்தவன்
ஞானபாரகன், ஞானவறிவிற்றெளி
ஞானபுத்திரன், சீஷன்
ஞானபூசை, மனோபூசை
ஞானபூரணி, பார்பதி

ஞானபூருவம், முன்னறிவு
ஞானபூர்த்தி, மிகுஞானம்
ஞானப்பிராந்தி, } ஞானமயல்
ஞானப்பைத்தியம், }
ஞானமார்க்கம், ஞானநிலை
ஞானமூர்த்தி, சரச்சுவதி, சிவன்
ஞானம், அறிவு, இராசதகுணத்தொன்று, கல்வி, சாத்துவிககுணத்தொன்று, நல்லொழுக்கம்
ஞானரேகை, கைவரையிலொன்று
ஞானவதி, ஞானமுள்ளவள்
ஞானவஸ்து, கடவுள்
ஞானவல்லி, பார்பதி
ஞானவழி, சைவநிலைநான்குபாதத்தொன்று
ஞானவான், ஞானி
ஞானவிரல், ஆழிவிரல்
ஞானன், கடவுள், பிரமன்
ஞானாகாயம், பரவெளி
ஞானாசத்தி, பஞ்சசத்தியிலொன்று. அஃது ஐம்பொறியுணர்ச்சியாகநின்றுகருமங்களையறிந்தூட்டுவது
ஞானாசாரம், ஞானவொழுக்கம்
ஞானாசாரியன், ஞானபோதகன்
ஞானாதிக்கம், ஞானாதிகாரம்
ஞானாதிக்கர், கடவுளைக்குறித்தஞானத்திலாதிக்கம்பெற்றோர்
ஞானாத்துமா, சுத்தாத்துமா
ஞானார்த்தம், உட்பொருள்
ஞானாவரணியம், அறிவுமறைப்பு
ஞானானந்தம், பேரின்பம்
ஞானானந்தன், கடவுள்
ஞானானுட்டானம், ஞானநிட்டை
ஞானானுபவம், ஞானபோகம்
ஞானானுபானம், திரவியம், திருவிருந்துவஸ்து
ஞானி, அருகன், பிரமன், பேரறிவுடையோன்
ஞானேந்திரியம், அறிகருவி, அஃது மெய்-வாய்-கண்-மூக்கு-செவி
ஞானோபதேசம், ஞானபோதகம்
ஞான்று, ஓரிடைச்சொல், காலம், நாள்

## ஞி

ஞிமிர், ஒலி, நிமிரென்னேவல்
ஞிமிர்தல், ஒலித்தல், நிமிருதல்
ஞிமிறு, வண்டு

## ஞெ

ஞெகிழம், பொற்சிலம்பு
ஞெகிழி, சிலம்பணி, சிலம்பு, தீ, தீப்பொறி, நெருப்புக்கொள்ளி
ஞெகிழ்தல், அலையல், அவிழ்தல், வாடுதல்
ஞெண்டு, கற்கடகவிராசி, நண்டு
ஞெமிர்தல், ஒடிதல், நெரிதல், பரத்தல்
ஞெமுக்கம், அமுந்துகை
ஞெமுங்கல், } அமுந்தல்
ஞெமுக்குதல், }
ஞெரி, ஞெரியென்னேவல், நெரிவு
ஞெரிதல், நெரிதல்
ஞெரித்தல், நெரித்தல்
ஞெரேலெனல், அச்சக்குறிப்பு, அனுகரணவோசை, ஒலிக்குறிப்பு, சீக்கிரக்குறிப்பு
ஞெலிகோல், தீக்கடைகோல்
ஞெலிதல், கடைதல், குடைதல்
ஞெலுவல், செத்தல்
ஞெலுவன், தோழன்
ஞெளிர், உள்ளோசை, ஒலி
ஞெள்ளல், உடன்படல், ஒலித்தல், சீக்கிரம், சோர்பு, தவறு, பள்ளம், மிகுதி, மேன்மை, வீதி
ஞெள்ளெனல், அனுகரணவோசை

## ஞே

ஞேயம், அறியப்படுவது, நேயம்
ஞேயர், அறிவுடையோர், நேயர்
ஞேயா, பெருமருந்து

## ஞை

ஞை, இகழ்ச்சிக்குறிப்பு

## ஞொ

ஞொள்கல், } அச்சக்குறிப்பு, அலைதல், இளைத்தல், சோம்பல்
ஞொள்குதல், }

## த

த, ஓரெழுத்து, குபேரன், பிரமன்
தகசு, ஓர்மிருகம்
தகடு, அடர்பு, இலை, இலைத்தட்டு, ஐமைவடிவு
தகட்டரிதாரம், தகட்டுத்தாளகம்

தகட்டுத்தாளகம், ஓர்மருந்து
தகதகெனல், ஒளிக்குறிப்பு
தகப்பன், இன்றோன்
தகமை, தகைமை
தகம், உட்டணம், எரித்தல், நீர்
தகரப்பொடி, வாசனைப்பொடி
தகரம், இயம், ஓரெழுத்து, தகரமரம், அஃது பஞ்சவிரையினொன்று, மயிர்ச்சாந்து, வாசனைப்பண்டம், விலங்கின்பிள்ளை
தகராறு, தடை
தகரை, ஓர்சிறுசெடி
தகர், கருவிளுண், செம்மறிக்கடா, தகரென்னேவல், துண்டு, திருவாட்டேறு, பராகம், பலாசு, பூமி, மேடவிராசி, யாளி-யாளைபி வற்றினுண்
தகர்ச்சி, உடைவு [ருங்கல்
தகர்தல், உடைதல், நெரிதல், நொ
தகர்த்தல், உடைத்தல், குட்டுதல்
தகர்ப்பு, உடைப்பு, குட்டு
தகர்வு, உடைவு
தகல், தருதல், திராய்
தகல்பாசி, எத்தன், மோசக்காரன்
தகவல், உதாரணம்
தகவு, அறிவு, உரிமை, உவமை, ஒழுக்கம், கிருபை, குணம், தகுதி, தெளிவு, நன்மை, நீதி
தகழி, அகல்
தகழிகை, உண்கலம்
தகழிச்சி, கருப்பூரம்
தகளி, தகழி
தகனகேதனம், புகை
தகனக்கிரியை, இமச்சடங்கு
தகனபலி, தீயிலிடும்பலி
தகனப்பிரியை, சுவாகாதேவி
தகனம், சுடல் [நெருப்பு
தகனன், அக்கினிதேவன், துட்டன்,
தகனுராதி, நீர்
தகனித்தல், தகனம்பண்ணுதல்
தகனை, உலோகக்கட்டி
தகனோபலம், சூரியகாந்தம்
தகன், அக்கினி, திராய், பூரான்
தகா, தந்திரம், தாகம், பேராசை
தகாக்காட்டுதல், ஆசைபதங்காட்டல்
தகாதா, வழக்கு
தகாமை, ஒவ்வாமை, தகுதியின்மை

தகித்தல், சேமித்தல், சுடுதல்
தகிப்பு, சுடுகை, பட்சிப்பு
தகிலன், வஞ்சகன்
தகிலாயம், சிநேகம், நன்றி
தகிவித்தல், உட்செலுத்தல், பலப்பித்தல், மத்தித்தல் [ப்பு
தகிவிப்பு, உட்செலுத்துகை, மத்தி
தகிவிமா, சேரான்மரம்
தகுணிதம், வாச்சியப்பொது [தல்
தகுதல், இயலுதல், உரிமை, ஏற்கு
தகுதி, அறிவு, உரிமை, ஒழுக்கம், குணம், சனக்கூட்டம், பாத்திரம், பொறுமை
தகுதியர், } அறிஞர், தமர், பெ
தகுதியோர், } ருமையிற்சிறந்தோர்
தகுந்தவர், ஒழுக்கமுடையோர்
தகுவர், அசுரர்
தகுளம், மகளிர்விளையாட்டு
தகை, அழகு, அன்பு, கவசம், குணம், தகுதி, தகையென்னேவல், தளர்வு, துண்டு, பெருமை, முகடு
தகைதல், ஆணையிடல், இளைத்தல், தடுத்தல்
தகைத்தல், ஆணைசெய்தல், இளைத்தல், தடுத்தல், வாட்டுதல்
தகைப்பு, இளைப்பு, தடுப்பு, மதிற்சுற்று [பெருமை
தகைமை, அழகு, குணம், தன்மை,
தகையணங்குறுத்தல், களவுப்புணர்ச்சிசெய்ததலைவியைக்குறிப்பினலச்சுறுத்தல்
தகைவிலான், ஓர்குருவி
தகைவு, தடை, தளர்ச்சி
தக்ககன், ஓர்பாம்பு
தக்கடி, குதற்கம்
தக்கடை, தராசு
தக்கணம், தாளத்தின்மார்க்கசடப்பிரமாணத்தொன்று, அஃது எட்டுமாத்திரையோர்களையாகக் கொண்டது, தெற்கு, வலப்பக்கம்
தக்கணுக்கினி, } வேதாக்கினிமூ
தக்கணுக்கினியம், } ன்றினொன்று
தக்கணுயணம், } தெட்சணுயனம்
தக்கணுயனம், }
தக்கணை, தெட்சணை
தக்கது, தகுதியானது
தக்கம், ஓர்விளையாட்டு, தருமநூல் பதினெட்டினொன்று

தக்கர், சாடி
தக்கல், தக்கை
தக்கவர், தகுதியுடையோர்
தக்கன், அட்டநாகத்தொன்று, நவ
ப்பிரமாவிலொருவன்
தக்கார், அறிஞர், உறவோர், தகுதி
யுடையோர், பெருமையிற்சிறந்
தோர்
தக்காளி, ஓர்செடி
தக்காளிப்பிள்ளை, பிள்ளைப்பூச்சி
தக்கிஷராயன். பொன்னம்பர்
தக்கிரம், மோர்
தக்கிராடம், மத்து
தக்குதல், அரக்குதல், ஆட்சிக்குட்ப
டுதல், எல்லைகூட்டுதல், தகுதியா
யிருத்தல்,நயப்படல்,வசப்படுதல்
தக்குத்தக்கெனல், } ஓரடுக்கொ
தக்குப்பொக்கெனல், } லிக்குறிப்பு
தக்குவித்தல், ஆட்சிக்குட்படுத்தல்
தக்கெனல், ஒலிக்குறிப்பு
தக்கேசி, ஓர்பண்
தக்கை, காதிடுதக்கை, கிடைச்சி,
தெப்பம்,பம்பைவாச்சியம்,பலவ
கைப்பறை
தக்கோர், அறிஞர்
தக்கோலம், ஓர்செடி, அஃது பஞ்
சவாசத்தொன்று, வால்மிளகு
தங்கக்காசு, ஓர்நாணயம்
தங்கஞ்சலமாக்கி,சொன்னபேதி
தங்கப்பட்டை,சேணங்கட்டுங்கச்சு
தங்கப்பூச்சு, ஓர்மருந்துப்பூச்சு
தங்கப்பூவிராகன், ஓர்நாணயம்
தங்கமலாம், தங்கப்பூச்சு
தங்கமலை, மகாமேரு
தங்கமழுத்தல், தங்கமழுத்துதல்
தங்கமிருதியாதி, தங்கசிந்தூரம்
தங்கமிழைத்தல், தங்கமழுத்துதல்
தங்கமோரு, ஓர்நாணயம்
தங்கம், உயர்ந்தபொன், சுத்தம்
தங்கரேக்கு, பொன்னினூற்செய்தவி
தழ் [ங்கல்
தங்கல், தங்குதல், தங்குமிடம், தர
தங்கான், தங்கை
தங்காள், அரை
தங்கு, தங்குதல், தங்கென்னேவல்
தங்குடிச்சுற்றம், } ஞாதியர்
தங்குடித்தமர், }
தங்குதல், இருத்தல், தரித்தல், விடு
திவிடல்
தங்குதுறை, தரிக்கத்தக்கவிடம்
தங்குலம்வெட்டி, தங்கள்வமிசத்
தைக்கெடுப்போன்
தங்கை, } இளையாள்
தங்கைச்சி, }
தசகண்டசித்து, இராமன்
தசகண்டன், இராவணன்
தசகம், பத்து
தசகரம், தசவியசனம், அஃது அ
பாவனை-காமம்- சிற்றின்பகவி-சூ
து-நடனம்-பகற்றுயில்-மதுவுண்
மாயம்-விளையாட்டு-வேட்டம்
தசகுணம்,பதின்மடங்கு [ண்டவூர்
தசக்கிராமம், பத்துக்கிராமங்கொ
தசக்கிராமிணி,பத்துக்கிராமாதிகாரி
தசக்கிரீபன், இராவணன்
தசதானம், பத்துத்தானம், அஃது
உப்பு-எள்-நெய்- நெல்-பசு- பூமி-
பொன்-வத்திரம்-வெல்லம்-வெள்ளி
தசநாடி, அத்தி-அலம்புடை-இடை
-காந்தாரி-குகு-சங்கினி-சிகுவை
-சுழிமுனை-பிங்கலை-புருடன்
தசபலன், புத்தன்
தசப்பிராதுற்பவம், ஓர்பிரபந்தம்
தசப்பொருத்தம், செய்யுட்பொரு
த்தம்-மணப்பொருத்தம்-காண்க
தசமபாகம், பத்திலொருபங்கு
தசமம், பத்தினொன்று
தசமி, பத்தாந்திதி, பத்தாவது
தசமுகன், இராவணன்
தசமூலம், பத்துவகைமருந்துவேர்,
அஃது கண்டங்கத்தரி- சிறுமல்
லிகை-சிறுவழுதுணை-தழுதாழை-
நெரிஞ்சி -பாதிரி- பெருங்குமிழ-
பெருமல்லிகை-வாகை-வில்வம்
தசம், சிவிகை, பத்து
தசரதன், இராமன்பிதா
தசபாத்திரம், பத்துகால்
தசரூபவிருத்து, திருமால்
தசவவதாரம், தசாவதாரம்
தசவாயு, தேகத்தினிற்கும்பத்துவா
யு, அஃது அபானன்-உதானன்-
கிருதரன்-கூர்மன்-சமானன்-தன
ஞ்செயன் -தேவதத்தன்- நாகன்-
பிராணன்-வியானன்
தசனப்பொடி, பற்காவி [முடி
தசனம், பல், போர்க்கவசம், மலை

தசஞங்கம், தந்தரேகை [மின்மை
தசஞேச்சிட்டம், சும்பனம், தந்த
தசாகம், பத்துநாள்
தசாகரிசம், } விளக்கு
தசாகிசி, }
தசாங்கத்தயல், ஓர்பிரபந்தம், அஃது அரசன்றசாங்கத்தினையாசிரியவிருத்தம்பத்தினாற்பாடுவது
தசாங்கப்பத்து, ஓர்பிரபந்தம், அஃது நேரிசைவெண்பாவாலரசர்க்குரிய தசாங்கத்தினைப்பத்துச் செய்யுளாற்கூறுவது
தசாங்கம், அரசர்க்குரியபத்துறுப்பு, அவை ஊர்-கரி-கொடி-செங்கோல்-நாடு-பரி-மலை-மாலை-முரசு-யாறு
தசாசியன், இராவணன்
தசாசுபன், சந்திரன்
தசாட்சரி, ஓரிராகம்
தசாபலம், பிராயத்திற்கடுத்தபலம்
தசாரகன், அருகன், புத்தன்
தசார், ஆயத்தம்
தசாவதாரம், திருமாலவதாரம்பத்து, அஃது இராமன்-கண்ணன்-குதிரை-கூர்மம்-நரசிங்கம்-பரசிராமன்-பலபத்திரன்-மச்சம்-வராகம்-வாமனம்
தசானன், இராவணன் [சத்துரு
தசியு, அநீதன், கள்வன், கீழ்மகன்,
தசிரதேவதை, அச்சுவினிதேவதை
தசிரம், உட்டுளை, மறைத்தூறல்
தசிரர், தேவமருத்துவர்
தசுமம், நீ [போன்
தசுமன், கள்வன், யாகஞ்செய்விப்
தசும்பர், குடம்
தசும்பு, குடம், கொப்பரி, பொன்
தசேந்தனம், விளக்கு
தசேந்திரியம், உடலுறுப்புப்பத்து, அஃது ஆக்கிராணம்-உபத்தம்-சட்சு-சிங்குவை-சிரோத்திரம்-தொக்கு-பாணி-பாதம்-பாயுரு-வாக்கு
தசை, ஊன், தாது, புலால்
தசைதல், தசைபூரித்தல், தசைவைத்தல்
தசைத்தல், தசைபிடிப்பாதல்
தசைபிடி, } மிகுதசைகொண்
தசைப்பற்று, } டிருத்தல்
தசைப்பு, கொழுப்பு, தசைபிடி
தசைமுற்றுதல், கொழுப்பேறுதல்
தசையடைப்பு, சலத்துவாரநோயினொன்று
தசைபூறுதல், தசைவைத்தல்
தச்சன், சித்திரைநாள், மரவேலைக்கம்மாளன்
தச்சன்குருவி, ஓர்குருவி
தச்சிச்சி, தச்சப்பெண்
தச்சு, தச்சன், தச்சன்றொழில்
தஞ்சக்கேடு, பலவீனம்
தஞ்சம், எளிமை, தாழ்வு, துணை, பற்றுக்கோடு, பெருமை
தஞ்சங்பொளி, துருசி
தஞ்சாக்கூர், ஓரூர்
தஞ்சாவூர், } ஓரூர்
தஞ்சை, }
தஞ்ஞன், அறிஞன்
தடககம், } தடை
தடக்கு, } [ல்
தடக்குதல், தடைபண்ணல், தட்டுத
தடங்கல், தடை, தாமதம்
தடங்குதல், தாமதப்படுதல்
தடதடத்தல், நடுக்கத்தாற்றளம்பல், நாக்குத்தட்டல்
தடதடப்பு, தள்ளாட்டம்
தடதடெனல், தள்ளாடுதல், நடுக்கக்குறிப்பு
தடத்தம், } அருகு, இலௌகீககவலைவிட்டிருத்தல், கரை
தடஸ்தம், }
தடஸ்தன், ஞானி, பாரபட்சமற்றவன் [தல்
தடங்தேடுதல், கெடுக்கவகைபார்த்
தடபடத்தல், தளம்பல்
தடபடெனல், தள்ளாட்டக்குறிப்பு
தடமண், களிமண்
தடம், ஓமகுண்டம், ஓர்மரம், கண்ணி, கரை, குளம், தராசு, துலாராசி, பெருமை, மலை, மலைப்பக்கம், வரம்பு, வழி, வளையம், விசாலம், வெளி [கெடுதல்
தடம்புரளுதல், தடுமாறுதல், நிலை
தடல், வாழைநார்த்தன்மையானது
தடவரல், தடவுதல்
தடவல், ஆறு, தடவுதல், இஃது மெய்ப்பரிசமெட்டினொன்று, வீணைவாசித்தற்றொழிலினொன்று
தடவு, தடவென்னேவல், தூபக்கா

ல், பெருமை, வளைவு
தடவுதல், பூசுதல், வருடல்
தடவை, எல்லை, தரம், முறை
தடறு, ஆயுதவுறை
தடா, பானை, மிடா
தடாகம், குளம்
தடாதடி, குழப்பம்
தடாரி, தடாரியென்னேவல், பம்பை, பேரிகை, மத்தளம், வாச்சியப்பொது
தடாரித்தல், ஊடுருவுதல்
தடி, அளவுகோல், உடும்பு, உலக்கை, ஊன், சிறுவயல், தடியென்னேவல், தண்டு, பற்றுக்கோடு, மின், வயல், வளைதடி, வில்
தடிதல், அறுத்தல், குறைத்தல், கொல்லல், தறித்தல், மின்னுதல், வெட்டல்
தடித்தல், கனத்தல், காரியம்பலத்தல், புடைத்தல், மின்னுதல்
தடித்து, மின்னல்
தடிப்பம், } கனப்பு, தழும்பு, பரு
தடிப்பு, } மை
தடிமல், } சலதோஷம்
தடிமன், }
தடிமிண்டன், முரடன், வசையாதவன்
தடிமூக்குள்ளான், ஓர்குருவி
தடியன், முரடன், வசையாதவன்
தடிவு, கொலை, வெட்டு
தடினி, யாறு
தடுக்கல், தடை
தடுக்கு, சிறுபாய், தவிசு
தடுதல், இசைதல்
தடுத்தல், தம்பித்தல், மறித்தல், விலக்கல்
தடுதாளி, அவசரம்
தடுத்தாளுதல், மீட்டிரட்சித்தல்
தடுபடை, மாற்றுப்படை
தடுபொடுதாயம், அவசரம்
தடுபொடுத்தல், அவசரப்படுதல், ஒலிக்குறிப்பு
தடுபொடெனல், ஒலிக்குறிப்பு
தடுபொறி, மிகுசுறுக்கு
தடுப்பு, தடுத்தல்
தடுமாறல், } கலங்குதல், குழம்
தடுமாறுதல், } புதல்
தடுமாற்றம், கலக்கம், மாறுபட்டம்

தடை, கவசம், தடக்கு, தடையம், மறியல்
தடைதல், } தடுத்தல்
தடைத்தல், }
தடையம், தடை
தட்சணதுருவம், தென்முனை
தட்சணம், தெற்கு, நிதானம், வலப்பக்கம்
தட்சணாமூர்த்தி, அகத்தியன், சிவன்
தட்சணை, காணிக்கை
தட்சப்பிரசாபதி, தக்கன்
தட்சன், இடபம், சிவன், சேவல், தக்கன், தீ, பரலதிரீகமனன், புலவன்
தட்சாபன்னி, ஓர்மனு
தட்சாயம், கருடன் [ன்பக்கம்
தட்சிணபதம், தெட்சணவீதி, தெ
தட்சிணம், தாராளம், தெற்கு, வலப்பக்கம், விவேகம்
தட்சிணாக்கினி, தக்கணாக்கினி
தட்சிணாசலம், பொதியமலை
தட்சிணாசாபதி, நமன்
தட்சிணை, தெற்கு
தட்சிணாயனம், சூரியன்மூவகைவீதியிலொன்று
தட்சிணாவர்த்தம், வலம்புரிச்சங்கு
தட்டத்தனி, யாதொருதுணையுமில்லாததனிமை
தட்டம், உண்கலம், தட்டையான பாத்திரம், தாடி, பல், பாம்பினச்சுப்பல், மக்கட்படுக்கை
தட்டல், அடித்தல், அபகரித்தெடுத்தல், ஆணையிடல், ஐந்து, கிட்டல், தடுத்தல், மறுத்தல், முட்டுதல், மெய்ப்பரிசமெட்டினொன்று, வீணைவாசித்தற்றொழிலிலொன்று
தட்டவைத்தல், பொறுக்கவிடுதல்
தட்டழிதல், நிலைகுலைதல்
தட்டழிவு, நிலைகுலைவு [பென்
தட்டாத்தி, பொன்வினைமாக்களின்
தட்டாரப்பூச்சி, ஓர்பூச்சி
தட்டாரப்பொட்டு, வெளிவேஷம்
தட்டானுப்பி, ஓர்கொடி
தட்டான், கோஷ்டம், புடோல், பொற்கொல்லன்
தட்டான்கொட்டோசை, புடோல்
தட்டி, காவல், கேடகம், கோட்டம், படல், பலகை, வெற்றிலைத்தட்டி

விளைமீன், ஓர்மீன்
விளையாடுதல், பொழுதுபோக்கல்
விளையாட்டு, பொழுதுபோக்கு [ன்
விளையாட்டுப்பிள்ளை, சிறுபிள்ளை, விளை
விளையுங்காலம், அறுப்புக்காலம்
விளையுள், வயல்
விளைவித்தல், விளையச்செய்தல்
விளைவு, சம்பவிப்பு, தானியம், மேகம், வயல் [ருங்காலம்
விளைவுகாலம், தானியம்விளைந்திருக்
விள்ளல், } தழுவல், திறத்தல், பேசுதல், மலர்தல், வெடித்தல், வேறுபடல்
விள்ளுதல், }
விள்ளோடன், பருப்புவேறுசிரட்டைவேறுய்க்கழலுந்தேங்காய்
விறகு, சமிதை
விறகுதலையன், விறகுவெட்டி
விறப்பு, அச்சம், செருக்கம், பெருக்கம், போர், வெற்றி [ன்மகடூ
விறலி, பதினாறுவயசுப்பெண், பாட
விறலுவமம், ஒன்றன்விறலானுவமிப்பது (உம்) மதயானைபோலுமகங்காரம்
விறலோன், அருகன், திண்ணியன்
விறல், பெருமை, வலி, வீரம், வெற்றி
விறன்மிண்டன், அறுபத்துமூவரிலொருவன்
விருட்டி, எருவராட்டிமுதலியன
விருண்டுதல், பிருண்டுதல் [பொய்
விறிசு, ஓர்வாணம், புழுகுப்பேச்சு,
விறுதா, விருதா
விறுமதண்டம், குருக்கத்தி
விறுமன், ஓர்தேவதை
விறுமை, பிரமை [ால்
விறுவிறுத்தல், விறுவிறுப்புக்கொள்
விறுவிறுப்பு, கொதித்துவிளைதற்குறிப்பு, விரைவுக்குறிப்பு
விறுவிறெனல், விரைவின்குறிப்பு, விறுவிறுத்தற்குறிப்பு
விறைத்தல், மரத்துநிற்றல் [பு
விறைப்பு, திமிர், பிரமிப்பு, முறைப்
விற்குதல, விலைப்படுத்தல்
விற்பத்தி, கல்விவல்லபம்
விற்பத்திமான், கல்வியிற்சிறந்தோன்
விற்பனவு, } விற்றல்
விற்பனை, }
விற்பன்னம், நூதனம், விந்தை [லவர்
விற்பன்னர், கற்றோர், நூதனகாரர், பு
விற்பன்னித்தல், சிறப்பித்தல்
விற்புருதி, ஓர்சிலந்தி
விற்பூட்டு, பொருள்கோளெட்டினொன்று, அஃது செய்யுளிறுதியினுமுதலினுநிற்குமொழிகளைக் கூட்டிப்பொருள்கொள்வது
விற்போர், வில்லாண்மைப்போர்
விற்றல், விலைக்கிரயம்பண்ணுதல்
வினவல், } கேட்டாராய்தல் [ன்று
வினவுதல், }
வினதை, கருடன்றாய், சத்தபுரியிலொ
வினா, உசாவிலக்கணமைந்திலொன்று, கேள்வி, சொல், வினாவென்னேவல்
வினாதல், வினாவுதல்
வினாயகன், விநாயகன்
வினாவிடை, சல்லாபம்
வினாவுதல் கேள்விகேட்டல்
வினாவுத்தரம், மிறைக்கவியிலொன்று, அஃது ஒருசெய்யுட்கண்வினாவினுக்குக்கடைவினாவுற்கோருத்தரமாய்நின்றமொழிபிரிந்துமேல்வினாயபலவினாவிற்கும் பலவுத்தரமாய் நின்றுபொருடரத் தொடுப்பது
வினாவெண்பா, ஓர்நூல்
வினாவெதிர்வினா, வினாவுக்குவிடையாய்வினாவுதல், (உம்) உண்டாயோவென்றவழிஉண்ணேனோவென்பது
வினாவெழுத்து, வினாப்பொருடருமெழுத்து, அவற்றுள் எ-யா-ஏ-முதனிலைவினா, ஆ-ஓ-ஏ-கடைநிலைவினா
வினை, கருத்து, கள்ளம், தொழில், போர், வஞ்சகம்
வினைசாதித்தல், வினைபாராட்டல்
வினைச்சொல்- இடம்- கருவி- கருத்தா-செயப்படுபொருள்-செயல்-காலம் எனுமிவைகளை விளக்கிநிற்குஞ்சொல
வினைஞர், கம்மாளர், கூத்தர், சூத்திரர், செயலாளர், மருதநிலமாக்கள்
வினைதீர்த்தல், விக்கினந்தீர்த்தல்
வினைதீர்த்தான், விநாயகன்
வினைத்தொகை, பெயரெச்சத்தின்விகுதியிடைநிலைகடொக்குநிற்கப்பதம்வந்துபுணரும்புணர்ச்சி (உம்) விடுசரம்
வினைபாராட்டல், வினையழுத்தல்
வினைப்பகுதி, வினையிற்பகாப்பதமா

ப்முதனிற்குமுறுப்பு
வினைப்பகாப்பதம், செய்யென்னும் வாய்பாட்டால்வருமுதனிலைவினை
வினைப்பகுபதம், பகுதிமுதலியவுறுப்புக்களாற் பிரிக்கத்தக்க வினைச்சொல் [பலன்
வினைப்பயன், முன்வினைப்படிவந்த
வினைமுதல், கருத்தா [ணம்
வினைமுதற்பொருள், தொழிற்கார
வினைமுறுகுதல், வினைமூளுதல்
வினைமுறுக்குதல், வினைமூட்டுதல்
வினைமுற்று, பொருள்-இடமுதலியஆறன்புடைபெயர்த்துசெப்பவன் முதலியஆறையும் பெரும்பாலுந்தோற்றிமுடியும்வினை, (இவற்றுள்) தெரிநிலைவினைமுற்று பொன்-வயல்-வெளில்-காம்-பசப்பு-பிறப்புஎன்பவற்றேடு நீண்டது எனவொட்டிக்காண்க, குறிப்புவினைமுற்று அவன் பொன்னினன்-புறத்தன்-ஆதிரையான்-தாளன்-கரியன்-நடையன்(இவைபோல்வன)
வினையம், வஞ்சம், விகயம்
வினையழுத்தல், } வினைபாராட்டல்
வினையனத்தல்,
வினையாளர், ஏவல்செய்வோர், ஓர் தொழிலிற்றலைப்பட்டோர்
வினையியற்சொல், செந்தமிழ்நிலத்துமொழிகளாய் உலக வழக்கினுஞ்செய்யுள் வழக்கினு நின்று தம் பொருளையியல்பாகவிளக்கும்வினைச்சொல்
வினையுரைப்போர், தூதர்
வினையுவமம், தொழிலையேயுவமமாகவெடுத்துக்கூறுவது, (உம்) நிப்போத்தியன்
வினையெச்சக்குறிப்பு, தொழில்தோன்றுதவினையெச்சம்போலநின்று பிறிதுவினையோடுமுடிவது, (உம்) அன்றி-இன்றிஎன்பவற்றேடுநின்குர்எனவொட்டிக்காண்க
வினையெச்சம், பிறிதோர்வினையொடுமுடியஅவாவிநிற்கும்வினைச்சொல்-இஃதில் தெரிநிலைவினையெச்சம்-செய்து-செய்புமுதலிய வாய்பாட்டான்வருவன், குறிப்புவினையெச்சம் -அன்றி- இன்றி முதலியன
வினையெஞ்சணி, ஓரலங்காரம், அஃது வினையெஞ்சிநிற்பது
வினைவயிற்பிரிதல், அகப்பொருட்டுறையிலொன்று
வினைவழிச்சேறல், அகப்பொருட்டுறையிலொன்று
வினைவளர்த்தல், வினைபாராட்டல்
வினைவிநாசன், கடவுள் [தல்
வினைவிளைத்தல், பொல்லாங்குசெய்
விநோதம், அவா, அழகு, எதிரிடை, சந்தோஷம், நன்குதல், தொழில், பொழுதுபோக்கல், மகத்துவம், விளையாட்டு
விநோதன், பொழுதுகழிப்போன்
விநோதி, ஒன்றிலேபொழுதுகழிப்போன்
வின்னம், அரியப்பட்டது, இடைத்தல், தடை, பங்கப்பட்டது
வின்னூண், விற்பூட்டுங்கயிறு
வின்னூலாளன், துரோணாசாரியன்
வின்னூல், விலாச்சிரமவித்தை

## வீ

வீ, ஓரெழுத்து, கருப்பந்தரித்தல், சாவு, செல்லுதல், நீக்கம், பறவை, பூ, போதல், முன்னிலையசைச்சொல், விரும்புதல், வீயென்னேவல் [ம்
வீகம், காற்று, பட்சி, பூட்டு, மோதிரம்
வீகாசம், ஆடம்பரம், தனிமை
வீக்கம், ஆசை, கட்டு, பூரிப்பு, மிகுதல், வீக்குதல்
வீக்குதல், அழிக்குதல், கட்டல்
வீங்கல், நித்திரைசெய்தல், பருத்தல், மிகுதல், வீக்கம், வீங்கலான்
வீங்கி, சேங்கொட்டை, பேராசையுள்ளோன், வீங்கலான்
வீங்குதல், வீங்கல் [நடை
வீங்கை, அசைதல், ஆடல், குதிரை
வீசகணிதம், அட்சரகணிதம்
வீசகோசம், கொட்டை, தாமரைக்கொட்டை
வீசமாதிருகை, வீசகோசம்
வீசம், அவசியம், ஓரெண், ஓர்கணிதம், ஓர்மந்திரம, கொட்டை, சத்தியம், சுக்கிலம், நெல்விடைப்பொன், மூளை, மூலம்
வீசயனம், விசாரணை

வீசல், அடித்தல், இதல், எறிதல்
வீசனம், சிற்றுலவட்டம், பொருள்,
  விசிறி
வீசாட்சரம், மந்திரமூலம்
வீசி, அலை, அற்பம்; இளைப்பாற்றி,
  கிரணம், சந்தோஷம், வீசத்தை
  புடையது
வீசுகாலேணி, ஓரேணி
வீசுதல், வீசல்
வீசுதவர், ஓர்துறப்பணம்
வீசுவில், வீசுதவரின்வில்
வீசுவிற்குடம், வீசுதவரின்குடம்
வீசை, ஓர்நிறை, மீசை
வீசோதகம், ஆலாங்கட்டி
வீசோதகிருட்டம், கல்விதை
வீச்சு, எறிதல், ஓர்கோப், பூமி
வீச்சுக்காரன், செலவுகாரன்
வீச்சுக்காரி, செலவுகாரி, வேசி
வீச்சுக்கொள்ளுதல், வலிகொள்ளல்
வீச்சுவலை, ஓர்வலை
வீச்சேணி, வீசுகாலேணி
வீடல், சாதல், விடுதல்
வீடிகை, கட்டு, தாம்பூலம் [வேவல்
வீடு, மனை, மோக்கம், விடுதல், வீடென்
வீடுதாங்கி, தாக்குணி
வீடுநெறிப்பால், ஓர்நூற்பகுதி
வீடுவிலக்கம், மகளிர்ருதகம் [முதல்
வீட்சணம், பார்த்தல், பார்வை, வி
வீட்சம், அதிசயம்
வீட்சிதம், பார்வை [அ
வீட்சியம், அதிசயம், காணப்பட்ட
வீட்டாள், மனைவி, வீட்டுவேலைகாரி
வீட்டுக்கிரியை, சாச்சடங்கிலொன்று
வீட்டுக்குத்தூரம், மகளிர்ருதகம்
வீட்டுதல், கொல்லல் [ன்று
வீட்டுநெறிப்பால், அறப்பாலிலொ
வீட்டுப்பூனை, இற்புலி
வீட்டுமுன்கட்டு, முன்கட்டுவீடு
வீட்டுவாடை, வீட்டிலிருப்போர்
  கொடுக்குங்கூலி
வீட்டுவிசாரணை, உக்கிராணம்
வீட்டுவீரன், வீட்டிலிருந்துவீரம்பே
  சியும்வெளியில்அஞ்சுவோன்
வீட்டுள்ளார், உள்ளிட்டார்
வீணன், விருதாவி
வீணுகரணம், வீணைவாசித்தல்
வீணுகானம், வீணைகாதம்
வீணுட்டம், வீண்பிரயாசம்

வீறுதண்டம், } முள்ளெலும்பு, வீ
வீறுதண்டு, } ணைக்கழுத்து
வீறுவாதன், யாழ்ப்பாடி
வீறுக், விருதாவி
வீறுபர்தம், வீணையினடிப்பக்கம்
வீணை, ஓசையாழ், கலைஞானமறுப
  த்திரண்டிலொன்று, மின்னல்
வீணையியக்கல், வீணையிலேபாடுதல்
வீணைவல்லோர், கந்தருவர்
வீணைவாசித்தல், வீணையியக்கல்
வீண், பயனின்மை
வீண்பத்தி, அவபத்தி
வீதசோகம், அசோகு
வீதம், அவிழ்த்துவிடப்பட்டது, இட்
  டமானது, சமாதானம், விதம், வே
  றுவேறுப்பகுத்தபகுப் பினளவு
வீதல், கெடுதல், சாதல், வறுமை
வீதராகம், பற்றின்மை
வீதி, ஒழுங்கு, கடைவீதி, குதிரை,
  சுத்திபண்ணல், தெரு, நாடகவகை
  பத்திலொன்று, நேரோடல், பிர
  வை, மேடை, வரி, வழி, விசாலம்
வீதிகோத்திரன், அக்கினி, சூரியன்
வீதிக்குதல், } பங்கிடுதல், விசாலித்
வீதித்தல், } தல்
வீதியங்கம், சம்பாஷணை
வீதிவண்ணச்சேலை, ஓர்புடைவை
வீநாகம், கூவற்சுவர்
வீபணி, கடைவீதி
வீபத்து, சந்திரன்
வீபற்சு, அருச்சுனன்
வீப்பகழி, புட்பாத்திரம்
வீமசேனன், தமயந்தியின்பிதா, பஞ்
  சபாண்டவரிலொருவன் [ருவன்
வீமதேவன், பன்னிருருத்திரரிலொ
வீமம், பயங்கரம், பருமை
வீமன், வீமசேனன்
வீம்பு, புகழ்ச்சி, பெருமை [ணி
வீரகண்டாமணி, வீரத்தாற்கட்டும
வீரகத்தி, வீரரைக்கொன்றபழி
வீரகன், சுத்தக்கிரகாக்கினியைத்த
  ணியவிட்டபார்ப்பான் [ளொருவன்
வீரகுடியான், பதினெண்குடிமையி
வீரகெம்பீரம், மிகுவீரம்
வீரகேயூரம், இருப்புத்தோளணி
வீர கச்சு, புலித்தோற்கச்சு
வீரக்கடகம், மிருகவேட்டையாடு
  ளவீரர்க்குக்கொடுக்குங்காப்பு

வீரக்கவசம், வயிரமணியான்மார்பி
லணியுஞ்சீரா [லுங்கட்டுங்கழல்
வீரக்கழல்,கொடையாலும்வீரத்தா
வீரக்குட்டி, வீரவான் [க்கவசம்
வீரக்குழல், முக்கையிலணியுமிருப்பு
வீரக்கொடி, வெற்றிக்கொடி
வீரங்காட்டுதல், சூரங்காண்பித்தல்
வீரசயந்திகை, யுத்தம், யுத்தவீரர
தாடனம்
வீரசல்லாபம், வீரக்களிப்பாற்பே
சிக்கொள்ளும்பேச்சு
வீரசாகி, செங்கொட்டைமரம் [ய்
வீரசு, ஆண்பிள்ளையின்றாய், வீரன்று
வீரசூரம். மிகுவீரம்
வீரசூலம், போரிலேற்றவீரலைச்சு
லத்தாற்குற்றிப்பிடுங்கினவீரன்வி
ருது
வீரசேனசன், நளராசன்
வீரசேனன், நளராசாவின்பிதா
வீரசைவம். ஓர்சமயம்
வீரசைவர், இலிங்கதாரிகள்
வீரசொற்கம், போரிலிறக்கும்வீரர்
சேரும்பதவி
வீரச்சலங்கை, ஒற்றைக்காலிலணி
யும்பொற்சலங்கை
வீரச்செல்வி, துர்க்கை
வீரட்டம், ஓர்சிவதலம்
வீரட்டாணம், கூத்தின்விகற்பம்
வீரணம், இலாமிச்சம்வேர்
வீரதச்சுவன், மன்மதன் [டை
வீரதண்டை, வீரத்தாலணியுந்தண்
வீரதத்துவம், வீரத்தன்மை
வீரதுரந்தரன், மகாவீரன்
வீரதை, வீரம்
வீரத்தட்டி, மால்றேற்பட்டை
வீரத்தாம், மயில், மார்ச்சட்டை
வீரபத்திரம், அசுவமேதயாகத்துக்
கேற்றகுதிரை
வீரபத்திரன், உருத்திரமூர்த்திகளி
லொருவன், சிவகணத்தொருவன்,
வீரவான்
வீரப்பட்டயம், வெற்றிபெற்றவீரர்
நெற்றியிலணியும்பொற்றகடு
வீரப்பாடு, வெற்றி
வீரமகரம், சடல்சடந்துபகைவரூர்
க்கைப்பற்றியதேர்வேந்தர்முன்பா
கப்பிடிக்கும்விருது
வீரமாகாளர், ஐயன்படைத்தலைவன்
வீரமார்த்தாண்டன், நவசத்திபுத்தி
ரரிலொருவன்
வீரமாலை, வெற்றிபெற்றுவாங்கும்
பொன்மணிமாலை
வீரமுட்டி, வீரசைவத்துருத்திரவே
டம்பூண்டுசமயப்பாது காவலனா
யிருப்போன்
வீரமுத்திரிகை, சுண்டுவிரலணி
வீரம், இஞ்சிக்கிழங்கு, ஓரத்தி, ஓர்ம
ருந்து, கஞ்சி, சிவாகமமிருபத்தெ
ட்டினொன்று, பெலன், மலை, மிள
கு, மேன்மை, வலி, வீரியம்
வீரம்பேசல், } வீம்புபேசுதல்
வீரம்பேசுதல், }
வீரயாகம், வீரபத்திரருக்குச்செய்
யுமோர்வேள்வி
வீரரதம், அம்பு
வீரரேணு, வீமசேனன்
வீரர், படைவீரர் [ன்று
வீரலட்சிமி, அட்டலட்சிமிகளிலொ
வீரவாகு.முருகவேள்கணத்தலைவன்
வீரவாரம், வெட்சிமாலைமுதலியன
வீரவாளி, ஓர்புடைவை
வீரவிருட்சம், சேங்கோட்டைமரம்
வீரவெட்சிமாலை, ஓர்பிரபந்தம், அ
ஃது நிரைகோடற்குவெட்சிப்பூ
மாலைசூடிப்போய் நிரைகவர்ந்து
வரிலவனுக்குமுன்புதசாங்கம்வை
த்துப்போய்வந்தவெற்றியைக்கூ
றுவது
வீரவெண்டயம், வீரகண்டாமணி
வீரவெறி, வீரத்தாலாயமதர்ப்பு
வீரன், அருகன், ஓமாக்கினி,கூத்தா
டி, திண்ணியன், தீ, வீட்டுமாசாரி
வீராசனம், நாடகவலைகபத்தினொன்
று, போர்க்களம், முழந்தாளினிற்
றல், வீராதனம் [நகரம்
வீராணம், ஓர்வாத்தியம், ஏர்க்கரை
வீராணிக்கிழங்கு, ஓர்கிழங்கு
வீராதனம், வலத்தொடையிடக்கா
ற்பரட்டைச்சேர்த்தி யிருமாப்பு
ற்றிருத்தல்
வீராதிவீரன், மிகுவீரன்
வீராப்பு, பொருமல்
வீராய்தல், அகலல், சுற்றிவிசாரித்
துச்சம்பாதித்தல்
வீராவளி, வீராவேசம்
வீராவேசம், வீரவெறி

வீரி, காளி, துர்க்கை, வட்டத்திருப்பி
வீரிடுதல், ஒலிக்குறிப்பு
வீரியம், சுக்கிலம், பறைப்பொது, பி
ரபை, மகத்துவம், வித்து, வீரம்
வீரியர், வீரர்
வீரியவான், வீரமுடையோன்
வீருதம், மிடைதூறு [ரன்
வீரேசுபரன், மகாவீரன், வீரபத்தி
வீரை, ஓர்மரம், கடல், துன்பம், ம
ணிவி, மாதா, வாழை
வீரைச்செடி, ஓர்செடி [பு
வீர்வீரெனல், இரடுக்கொலிக்குறிப்
வீவதம், கா, காத்தண்டு
வீவு, சாவு
வீழி, ஓர்செடி
வீழுதல், விழுதல்
வீழ், மரவிழுது, வீழெனேவல்
வீழ்கதி, நரகம்
வீழ்க்கை, சோதிகான், விருப்பம்
வீழ்ச்சி, விழுக்காடு, விழுதல்
வீழ்தல், ஆசை, ஆசைப்படுதல், ஆ
சைப்பெருக்கம், மேவல், விழுதல்
வீழ்த்தல், விழுவித்தல்
வீழ்த்துதல், விழுத்துதல்
வீழ்நாள், இழக்தநாள்
வீழ்பிடி, குறைவு, வெறுப்பு
வீழ்வு, விழுதல்
வீறல், வீறுதல்
வீறுப்பு, இறுமாப்பு, சினப்பு
வீறு, தனிமை, புண்ணியம், பெரு
மை, விளக்கம், வீறுதல், வீறென்
னேவல், வெறுப்பு, வேகம்
வீறுகாட்டல், பெருமைகாட்டல்[ல்
வீறுதல், இழுத்தல், பெருமையுறுத
வீற்றம், வேறுபாடு [ழ்ந்திருத்தல்
வீற்றிருத்தல், தனித்திருத்தல், மகி
வீற்று, தனி, வேறுபாடு

## வெ

வெஃகல், ஆசைப்பெருக்கம், விரும்
பல் [ன்று
வெஃகா, காஞ்சிபுரத்தியாற்றிெ
வெஃகாமை, வெறுப்பு, வேண்டா
மை
வெகு, பல
வெகுகரிஷாத்தம், பருத்தல்
வெகுசனத்துரோகம், பலசனத்து
ரோகம்
வெகுசனரெட்சை, பலசனரட்சிப்பு
வெகுசு, மிகுதி
வெகுச்சுருதம், சிற்பநூன்முப்பத்
திரண்டினொன்று
வெகுட்சி, கோபம்
வெகுதானிய, ஓராண்டு
வெகுத்தம், அனேகம், மிகுதி
வெகுத்தல், மிகுத்தல்
வெகுநாயகம், வெகுபோதிகாரம்
வெகுபிட்டம், விரிவு
வெகுப்பு, மிகுப்பு
வெகுமதி, வெகுமானம்
வெகுமாரி, மிகுதி, வெகுமழை
வெகுமானம், உபசாரம் [பலவழி
வெகுமுகம், பலகவர், பலநோக்கு,
வெகுரூபன், ஓந்தி, சிவன், திருமால்,
பிரமன், மதன்
வெகுர், உட்டணத்தால்வநம்பரு
வெகுளி, சினம், இஃது முக்குற்றத்
தொன்று, மாயையாக்கைபதினெ
ண்குற்றத்துமொன்று
வெகுளுதல், } கோபித்தல்
வெகுள்தல், }
வெகுள்வு, கோபம்
வெக்காளம், வெப்பியாரம் [ல்
வெக்காளித்தல், வெப்பியாரப்படுத
வெக்கை, காங்கை
வெக்கைநோய், மிருகங்கள்நோயி
னொன்று, வைகுரிநோய்
வெங்கண், வைராக்கியம்
வெங்களம், போர்க்களம்
வெங்காயம், வெண்காயம்
வெங்காரம், வெண்காரம்
வெங்கார், வேடை
வெங்கான்வெளி, கடுங்கானல்வெளி
வெங்கிணுத்தி, ஓர்பாம்பு [ளி
வெங்கிராயன்வெளி, கடுங்கானல்வெ
வெங்கோஷ்டம், ஓர்மருந்து
வெங்கோல், கொடுங்கோல்
வெச்சுவெந்நீர், சுடுநீர்
வெச்செனல், வெம்மையாதல்
வெச்செனவு, சூடு [போர்
வெஞ்சமம், பாலைநிலத்திராகம்,
வெஞ்சமன், இயமன்
வெஞ்சம், கோபம் [ண்டி
வெஞ்சனம், கறிபதார்த்தம், சிற்று
வெஞ்சிலைச்செல்வன், வீரபத்திரன்
வெஞ்சுடர்க்கிரணன், சூரியன்

வெடி, அச்சம், இடி, கள், துப்பாக்கிமுதலியவற்றிற் பிறக்குமொலி, நறுமணம், நறும்புகை, வெடிவெள்ளேவல்
வெடிகிரந்தி, ஓர்வகைக்கிரந்தி
வெடிக்குதல், வெடித்தல் [று
வெடிசன்னி, சன்னிபேதத்திலொன்
வெடிகுலை, ஓர்குலை
வெடிச்சுடுதல், வெடிவைத்தல் [ரல்
வெடித்தகுரல், கடுந்தொனியானகு
வெடித்தசொல், வெடுவெடுப்பானபேச்சு
வெடித்தல்,பிளத்தல், விள்ளுதல்
வெடிபலவன், பேய்ப்பலவன்
வெடிப்பு, அதிகம், கமர், விள்ளுகை
வெடியுப்பு, } ஒருப்பு
வெடிலுப்பு, } [ம்
வெடிலுப்புத்திராவகம்,ஓர்திராவக
வெடில், உறளுற்றம்
வெடுக்கன், கோபி
வெடுக்கு. வெடில்,வெட்டெனவு,வெட்டெனவுள்ளது
வெடுக்கெனல், கடுமைக்குறிப்பு
வெடுப்புக்காட்டுதல், சினப்புக்கொள்ளுதல்
வெடுவெடுத்தல், கடுமையாயிருத்தல், கோபித்துப்பேசல்
வெடுவெடெனல், சினக்குறிப்பு
வெட்கக்கேடு, மானபங்கம்
வெட்கம், நாணம்
வெட்கல், } அச்சக்குறிப்பு,நாணு
வெட்குதல், } தல்
வெட்கறை, இலச்சை
வெட்கிளுவை,கிளுவையிலோர்பேதம்
வெட்குவெட்கெனல்,வெட்கக்குறிப்பு
வெட்சி, ஓர்பூஞ்செடி, பகைநிரைபோட்டுவார்க்குமாலை
வெட்டல், கொலைசெ[ய்]தல், தரித்தல்,கால்வகைபூறுபாட்டி[ல]ொன்று, மெய்ப்பரிசமெட்டி[லொ]ன்று
வெட்டவெளி,ஏகவெளி,வெளியரங்கம்
வெட்டருவி, நத்தைச்சூரி
வெட்டனம், காப்புக்கட்டல்
வெட்டனவு, கடுமை, வலோற்காரம், வெடுக்குத்தனம்
வெட்டாந்தரை, கடுந்தரை
வெட்டி, ஓர்செடி, வழி [றையன்
வெட்டியான், சவஞ்சுடுவோன், ப
வெட்டிரும்பு, இரும்புவெட்டுமோருளி
வெட்டிவீரன், சுத்தவீரன்
வெட்டிவேர், இருவேலிவேர்
வெட்டிமை, கடுமை, சினம்
வெட்டுக்கன்று, வரைகன்று
வெட்டுக்கிளி, ஓர்பூச்சி
வெட்டுனி, தப்பிலி
வெட்டுண்ணல், } வெட்டப்படுத
வெட்டுப்படுதல், } ல்
வெட்டுதல், வெட்டல்
வெட்டுத்தட்டு, பறையின்வாய்வார்
வெட்டுமாறன்,வெறியுள்ளஓர்வலது
வெட்டுரை,வெடுவெடுப்பானபேச்சு
வெட்டுரைப்பணம், கள்ளநாணயம்
வெட்டுவாய், தறிவாய்
வெட்டுவான், ஓர்வாள்
வெட்டுவெட்டெனல், கடுமைக்குறிப்பு [பு
வெட்டுவேளாண்மை, தானியமறுப்
வெட்டெனல், கடுமைக்குறிப்பு
வெட்டெனவு, கடுமை
வெட்டேறு, ஓர்கருவி [வெளி
வெட்டை, உட்டணம், ஓர்நோய், வெட்டைவெளி, வெறுவெளி
வெட்பகடம், வெளிப்பகடம்
வெட்பாடம், வாய்ப்பாடம்
வெட்பாலை, ஓர்மரம்
வெட்பாவட்டை, ஓர்பாவட்டை
வெட்புகார், கருக்கொள்ளாமுகில்
வெட்பூல், ஓர்பூல்
வெண்கடம்பு, ஓர்கடம்பு
வெண்கடுகு, ஓர்கடுகு
வெண்கதிரோன், } சந்திரன்
வெண்கதிர், }
வெண்கலம், ஒருலோகம்
வெண்கலி, கலித்தளையும்வெண்டளையும்விரவியும்அயற்றளைபருகியும் வந்துஇற்றடிமுச்சீரானிறுவது
வெண்கல், வெள்ளைக்கல் [ணம்
வெண்காக்கணம், வெள்ளைக்காக்க
வெண்காசம், கண்ணோயுளொன்று
வெண்காடு, ஓர்சிவதலம்
வெண்காந்தள், ஓர்கொடி
வெண்காயம், உள்ளி, ஓர்காயம்
வெண்காரம், ஓர்காரம்
வெண்காரை, வெள்ளைக்காரை
வெண்கிடை, } ஓர்கிடைச்சி
வெண்கிடைச்சி, }

வெண்குங்குலியம், வெள்ளைக்குங்குலி [யம்
வெண்கிளி, வெள்ளைக்கிளி
வெண்குட்டம், ஓர்நோய்
வெண்குமுதம், வெள்ளாம்பல்
வெண்குன்றி, அதிமதுரம் [லி
வெண்கூதாளம், ஓர்செடி, நீர்த்தா
வெண்கொடிவேலி, ஓர்பூடு
வெண்கோல், வெள்ளி [திரம்
வெண்கொற்றக்குடை, தவளச்சத்
வெண்சலசமூற்றுள், சரச்சுவதி
வெண்சாமரை, வெள்ளைச்சாமரம்
வெண்சாரை, இந்திரியம், வெள்ளைச்சாரை
வெண்சீர், மூவசைநேரீற்றுச்சொல்
வெண்சீர்வெண்டளை, காய்முன்னேரும்பூமுன்னேரும்நேரொன்றிவருமபந்தம்
வெண்சுடர், சந்திரன்
வெண்டகரை, ஓர்பூடு
வெண்டயம், வெண்டையம்
வெண்டலை, தலையோடு [ம்
வெண்டளை, வெண்பாவுக்குரியபந்த
வெண்டாது, வெள்ளி
வெண்டாமரை, ஓர்தாமரை
வெண்டாமரையாள், சரச்சுவதி
வெண்டாழிசை, வெண்பாவின்கலிநுண்ற, அஃது மூன்றடியாய்முதலிரண்டடிபுகாற்சீராயும்இற்றடி பொன்றும் வெண்பாவைப்போலமுச்சீராயும் முடிவுபெற்று வேற்றுத்தளைவிரவிவருவது
வெண்டாழை, ஓர்தாழை
வெண்டி, விறுதா
வெண்டு, கடுக்கன்புரி
வெண்டுறை, வெண்பாவினங்களிலொன்று, அஃது மூன்றடிமுதலேழடியீறுகப்பின்புநின்ற சிலவடிகளிற்சிலசீரடிகுறைந்துவருவது
வெண்டேர், கானல்
வெண்டையம், ஓர்சிறுமணி
வெண்ணங்கு, ஓர்மரம்
வெண்ணுபுருவி, ஓர்செடி
வெண்ணரி, ஓர்பூடு
வெண்ணாரை, ஓர்கொக்கு
வெண்ணுவல், ஓர்காவல் [தரை
வெண்ணிலம், மணற்றரை, வெறுந்
வெண்ணிறுவை, மென்புரட்டு
வெண்ணிலை, கைமாற்றுக்கடன்
வெண்ணிறம், வெள்ளைநிறம், வெள்ளைநுரை
வெண்ணெய், உருக்காநெய்
வெண்ணெய்ச்சுறு, ஓர்சுறு
வெண்ணெய்தல், ஓர்நீர்ப்பூ
வெண்ணெய்நல்லூர், ஓர்சிவதலம்
வெண்ணொச்சி, ஓர்நொச்சி
வெண்ணேறு, ஓர்கண்ணேறு
வெண்பதம், இளம்பதம்
வெண்பலி, சாம்பல்
வெண்பா, ஓர்பா, அஃது இற்றடிமுச்சீரடியாகவும்னையடிகாற்சீரடியாகவும்பெற்றுக்காய்ச்சீருமகவற்சீரும்வெண்சீர் வெண்டளையுமியற்சீர் வெண்டளையுங்கொண்டு வருவது
வெண்பு, வெண்ணிலம், வெளிப்பு
வெண்புணர்ச்சிமாலை, தண்டகமாலை, அஃது வெண்பாவான்முந்நூறுசெய்புட்கூறுவது
வெண்புழுக்கு, இளம்புழுக்கு
வெண்பொன், வெள்ளி
வெண்மட்டம், கொத்துவேலையில்லாதசெய்கை [லை
வெண்மட்டவேலை, ஒப்புரவானவே
வெண்மணல், வெள்ளைமணல்
வெண்மணி, கண்மணி
வெண்மயிர், சாமரம், நரைமயிர்
வெண்மலை, கைலை [வெள்ளை
வெண்மை, அறிவின்மை, இளமை,
வெண்மொக்தன், ஓர்வாழை
வெதிரம், செவிடு .[க்கு
வெதிரேகம், எதிர்மறை, பிரிவு, வில
வெதிரேகவநுமானம், ஓரளவைப்பிரமாணம்
வெதிரேகாலங்காரம், ஓரலங்காரம், அஃது உவமானவுபமேயத்தினிற்பிரிவுதோன்றச்சொல்வது
வெதிர், செவிடு, மூங்கில்
வெதிர்த்தல், சினத்தல் [நடுக்கம்
வெதிர்ப்பு, கலக்கம், சினக்குறிப்பு,
வெதுக்கலன், வெதும்பினவன் [ன்
வெதுக்கல், வெதுப்பல், வேதும்பல
வெதுப்படக்கி, குப்பை
வெதுப்பம், வெப்பம்
வெதுப்பல், வாட்டல்
வெதுப்பு, சுரம், வெதுப்பெண்ணெவல், வேம்பு

வெதுப்புதல், வாட்டுதல்
வெதும்பல், சினக்குறிப்பு, வாடல்
வெதும்புதல், வாடல் [தல்
வெதுவெதுத்தல், இளஞ்சூடாயிருத்
வெதுவெதுப்பு, இளஞ்சூடு
வெந்தயம், ஓர்சரக்கு
வெந்தித்தல், கொதித்தல், சினத்தல்
வெந்திப்பு, கொதிப்பு, சினப்பு
வெந்து, இவை
வெந்தசனம், சுற்றத்தார்
வெந்தை, பிட்டு
வெந்தையம், வெந்தயம்
வெந்நீர், சுடுநீர் [ளம்
வெப்பசாரம், மனத்துயர், வெக்கா
வெப்பம், ஆசை, மனத்துயர், வெ
ந்திப்பு, வெம்மை
வெப்பித்தல், வெம்மைகொள்ளுதல்
வெப்பியாரம், வெப்பசாரம் [ம்மை
வெப்பு, ஓர்நோய், மனத்துயர், வெ
வெப்புக்கட்டி, வெப்பினால்வயிற்றி
னுண்டாகுங்கட்டி [ளகாய்ச்சல்
வெப்புக்கொதி, வெப்பினுண்டா
வெப்புப்பாவை, வெப்புக்கட்டி
வெப்புவெப்பெனல், கோபக்குறிப்
பு. துயர்க்குறிப்பு
வெம்பல், பெருங்கோபம், வாடல்,
விம்மல், வெக்காளித்தல், வெம்ப
லானது
வெம்பளிக்கை, வெம்பிளிக்கை
வெம்பிளாந்தி, ஏமிலாந்தி
வெம்பிளிக்கை, அகங்காரம்
வெம்புதல், கலங்குதல், சினத்தல், வா
டுதல், வெக்காளித்தல்
வெம்மை, ஆசை, உட்டணம், என்
வகைபூமியொன்று, கடுமை
வெயிலெறித்தல், ஒளிவீசல்
வெயில், ஒளி, சூரியகிரணம், சூரியன்
வெயிற்குளித்தல், வெயிலடியுணல்
வெயிற்குளிர்தல், சூரியகிரணவெம்
மைதணிதல் [து
வெய்து, வெம்மையுடையது, வெய்ய
வெய்துயிர்த்தல், நெடுமூச்சுவிடல்
வெய்துறல், அச்சக்குறிப்பு, சினக்கு
றிப்பு, துன்பம்
வெய்தெனல், விரைவுக்குறிப்பு
வெய்யது, பொல்லாதது, வெம்மை
யானது
வெய்யநீர், வெந்நீர்

வெய்யவன், } கொடியோன், சூரி
வெய்யோன், } யன், மிருகசீரிடம்,
விருப்புற்றோன்
வெய்யில், சூரியகிரணம், வெயில்
வெரு, அச்சம்
வெருகடி, பூனையடி
வெருகடிப்பிரமாணம், மூன்றுவிர
லாற்கின்றுமளவு
வெருகம், வாலின்கீழ்
வெருகு ஆண்பூனை, பூனை, மெருகு
வெருக்கொள்ளல், அச்சமுறல்
வெருட்சி, அச்சம், மயக்கம்
வெருட்டல், அச்சமுறுத்தல், மயக்க
ல் [ன்
வெருட்டி, அச்சம், அச்சுறுவிப்போ
வெருட்டு, அச்சுறுத்தல், வெருட்
டென்னேவல்
வெருட்டுதல், வெருட்டல்
வெருவந்தம், அச்சம்
வெருவல், வெருவுதல்
வெருவு, அச்சம், வெருவென்னேவல்
வெருவுதல், அஞ்சல் [ல்
வெருளார்த்தல், திகைத்தல், மயங்க
வெருளி, அச்சமுடையது, அச்சமு
றுவிப்பது, வெருட்சி
வெருளிகட்டுதல், அச்சுறுத்தல், வெ
ருட்சிக்குறி
வெருளுதல், } அஞ்சுதல், மருளுதல்
வெருள்தல், }
வெருள், அச்சம், உன்மத்தம், வெரு
ளென்னேவல்
வெலிகாரம், வெண்காரம்
வெலித்தி, சீவல்
வெல்லப்பாகு, வெல்லப்பாணி
வெல்லம், கரும்பின்கட்டி
வெல்லல், கதித்தல், சயித்தல்
வெல்லி, சிற்றேலம்
வெல்லுதல், மேற்கொள்ளல்
வெல்லுமா, புலி [யோன்
வெவ்வியன், கோபி, வெப்பமுடை
வெவ்வினை, போர்
வெவ்வுழவு, அடையாதவுழவு
வெவ்வேறு, வேறுவேறு [லாவெளி
வெளி, ஆகாயம், புறம், மறைப்பில்
வெளிக்கட்டு, வீட்டிற்புறக்கட்டு
வெளிக்காட்சி, வெளியானதோற்றம்
வெளிசம், தூண்டில் [ல்
வெளிச்சங்காட்டுதல், ஒளிகாட்டுத

வெளிச்சம், பிரவை, வெளியரங்கம்
வெளிதிறத்தல், வெளிவிடுதல்
வெளிது, வெண்மையுடையது, வெறிதானது [யாடத்தல்
வெளித்தட்டு, பொறுப்பின்றிக்காரி
வெளித்தல், வானம்வெளிவாங்குதல், விளங்குதல், வெறிதாதல்
வெளித்தோற்றம், உள்ளொன்றுபுறம்பொன்றாயிருப்பது, உற்பத்தி, பிரத்தியட்சம் [தல்
வெளிகாடுதல், வெளியேகாணப்படு
வெளிபொருள், வெளியரங்கமான பொருள்
வெளிப்பகடம்,உள்ளிருப்பதைமறைத்துநடப்பது, வீண்பகட்டு
வெளிப்பகட்டு, வெளிவெருட்டு
வெளிப்படல், } தோற்றல், வெளி
வெளிப்படுதல், } வருதல் [யாக்கல்
வெளிப்படுத்தல், அறிவித்தல்,வெளி
வெளிப்படை, வெளியரங்கம்
வெளிப்படைச்சொல், இயல்பாய்விளக்கிநிற்குமொழி
வெளிப்படையுவமம், வினையும்-பயனும்- உவமையுருபும் வெளிப்படவிளங்கிநிற்குமுவமம்
வெளிப்பாடு, காணிக்கை, தோற்றம்
வெளிப்பு, விளக்கம்,வெளித்தல், வெளியிடம்
வெளிமடை, புறமடை
வெளிமான், பெண்மான்
வெளியரங்கம், வெளிப்படை [தல்
வெளியாகுதல்,வெளித்தல்,வெளிவரு
வெளியாக்கல், } விளக்குதல்,வெளி
வெளியாக்குதல், } வரப்பண்ணுதல்
வெளியாடை, தோரணம், புறவுடை
வெளியார், பெண்டியர்
வெளியிடல், வெளிவாங்குதல்
வெளில், அணில், கட்டுத்தறி, தயிர்கடைமத்து, யானைத்தூண்
வெளிவாங்குதல், வெளித்தல்
வெளிவாயன், அந்தரங்கமற்றவன்
வெளிவாய், பரகசியவாக்கு
வெளிவிடுதல், வெளிப்படுத்தல்
வெளிவிருத்தம், வெண்பாவினங்களிலொன்று,அஃது மூன்றடியானேனும் நான்கடியானேனுமுற்றுப்பெற்று அடிகளினிறுதிதோறுந் தனிச்சொற்பெற்றுவருவது

வெளிறர், அறிவில்லார்
வெளிவேடம், புறக்கோலம்
வெளிறல், } வெண்மையாதல்
வெளிறுதல், }
வெளிறு, அலிமரம், அறிவின்மை, கழலிமரம்,வயிரமில்லாமரம்,வெண்மை, வெளிறென்னேவல்
வெளிற்றுமரம், அலிமரம் [சொல்
வெளிற்றுரை, பொருளையின்றிய
வெளுத்தல், ஓர்மரம், வெள்ளையாக்கல், வெள்ளையாதல்
வெளுப்பு, வெண்மை, வெளுத்தல்
வெளுவெளுத்தல்,மிகவும்வெளிறுதல்
வெளுவெளுப்பு, நோயடைந்தவெண்மை
வெளுவை, வெளுத்தல்
வெளேரெனல், வெண்மைக்குறிப்பு
வெள்கல், அச்சம், வெட்குதல்
வெள்வரி, பலகறை
வெள்வாடை, சிறுவாடை
வெள்வெடி, சத்தவெடி
வெள்வேல், ஓர்மரம்
வெள்ளக்காடு, பெருவெள்ளம்
வெள்ளடி, வெருட்டு
வெள்ளடிச்சேவல், கத்திகட்டாமலடிக்குஞ்சேவல்
வெள்ளப்பாடு, பள்ளம், வெள்ளம்பிடிப்பதினால்வருஞ்சேதம்
வெள்ளம், ஓரெண், கடல், நீர்ப்பெருக்கு, மிகுதி
வெள்ளரசு, ஓரரசு
வெள்ளரி, ஓர்கொடி
வெள்ளலரி, ஓர்பூமரம்
வெள்ளல்லி,வெள்ளாம்பல் [டித்தது
வெள்ளழுகல், அழுகிவெண்ணிறம்பி
வெள்ளறிவன், அறிவீனன்
வெள்ளறிவு, அவிவேகம்
வெள்ளறுகு, ஓர்பூடு
வெள்ளாடு, ஓர்வகையாடு
வெள்ளாட்டி, ஏவற்பெண்
வெள்ளாண்மை, கிருஷி
வெள்ளாக்கை, ஓராக்கை
வெள்ளாப்பு, வைகறை
வெள்ளாம்பல், ஓராம்பல்
வெள்ளாவி, வெறுமாவி
வெள்ளாவிதட்டுதல், ஆவிபிடித்தல்
வெள்ளாவிரை, ஓராவிரை [தல்
வெள்ளாவிவைத்தல், ஆவிபடவைத்

வெள்ளாளர், பூவைசியர், மருதநில மாக்கள் [வெண்மை
வெள்ளி, சுக்கிரன், வெண்பொன்,
வெள்ளிக்கிழமை,சுக்கிரவாரம்[மூமிடி
வெள்ளிடி, மழைக்குணமில்லாமல்வி
வெள்ளிடை, வெளி
வெள்ளிநிமிளை, வெள்ளிமலாம்
வெள்ளிப்பிரிவு,சுக்கிரனிருந்தவிராசி விட்டுப்பிரிதல்
வெள்ளிமடத்தான், ஓர்மீன்
வெள்ளிமலாம், வெள்ளிநிமிளை
வெள்ளிமலை, கைலைமலை
வெள்ளிலை, வெற்றிலை
வெள்ளிலோத்திரம், ஓர்மருந்து
வெள்ளில், பாடை, விளாமரம்
வெள்ளிறகுமந்தாரை, ஓர்மந்தாரை
வெள்ளிறுல், ஓர்வகையிறுல்
வெள்ளீயம், ஓரீயம்
வெள்ளீரல், மணிக்குடர்
வெள்ளுப்பு, ஓருப்பு
வெள்ளுழவு, புழுதியுழவு
வெள்ளுள்ளி, ஒருள்ளி
வெள்ளுறட்டி, ஓர்பண்ணிகாரம்
வெள்ளுமத்தை, ஒருமத்தை
வெள்ளெருக்கு, ஓரெருக்கு
வெள்ளெலி, ஓரெலி
வெள்ளெலும்பு,தசைகழிந்தவெலும்பு
வெள்ளெழுத்து,கண்புகைச்சல்,பார்வைக்குவெறிதாய்நிற்குமெழுத்து
வெள்ளென், ஓரென்
வெள்ளென, காலம்பெற
வெள்ளெனல், வெண்மையாதல்
வெள்வேடு, எழுதாவேடு
வெள்ளேறன், பழுதானஇரும்பு
வெள்ளை, ஆழமானகருத்தில்லாதது, சங்கு,பலபத்திரன்,மேற்கட்டி,வெட்டை, வெண்பா, வெண்மை, வெள்ளாடு, வெள்ளாட்டுமறி, வெள்ளி
வெள்ளைகட்டுதல், மேற்கட்டிகட்டுதல்
வெள்ளைக்கரு, முட்டையிற்சிவப்புக்கருவின்புறக்கரு
வெள்ளைக்கவி, புன்சொற்கவி
வெள்ளைக்காக்கணம், ஓர்கொடி
வெள்ளைக்காரர், வெள்ளைமனிதர்
வெள்ளைக்காரை, ஓர்செடி
வெள்ளைக்கிளி, ஓர்கிளி
வெள்ளைக்கிரி, இராசகிரி

வெள்ளைக்குங்குலியம், ஓர்மருந்து
வெள்ளைக்குன்றி, அதிமதுரக்கொடி
வெள்ளைக்குன்றிமணி, ஓர்குன்றிமணி
வெள்ளைச்சாரணை, ஓர்சாரணை
வெள்ளைச்செவ்வந்தி. ஓர்செவ்வந்தி
வெள்ளைகாவல், ஓர்காவல்
வெள்ளைநிறத்தாள், சரச்சுவதி
வெள்ளைநெல், ஓர்நெல் [த்தல்
வெள்ளைபூசுதல், மல்லாக்காய்க்கிட
வெள்ளைப்பவளம்,வெள்ளைப்போளம்
வெள்ளைப்பாகல், ஓர்பாகல் [ம்
வெள்ளைப்பாஷாணம், ஓர்பாஷாண
வெள்ளைப்பிள்ளை, வஞ்சகமற்றவன்
வெள்ளைப்புத்தி, பிள்ளைப்புத்தி
வெள்ளைப்பேச்சு, சுத்தவாக்கு
வெள்ளைப்பொன்னுவிரை, ஓராவிரை
வெள்ளைப்போளம், ஓர்மணி, ஓர்மருந்து
வெள்ளைமனிதர், வெள்ளைக்காரர்
வெள்ளைமெய்யாள், சரச்சுவதி
வெள்ளையடித்தல், சுவர்முதலியவற்றிற்குநீறுபூசுதல்
வெள்ளையானை, கீழ்த்திசையானை
வெள்ளையானையூர்தி, } இந்திரன், ஐயன்
வெள்ளைவாரணன், }
வெள்ளைவிழி, கருமணியருகு [கற்றல்
வெள்ளைவெளுக்குதல், ஆடையழுக்க
வெள்ளைவெளேரெனல், மிகுவெள்ளைக்குறிப்பு [சை
வெள்ளொத்தாழிசை, வெண்டாழி
வெள்ளொலியல்,புடைவைக்குஞ்சம்
வெள்ளோக்காளம், } கக்கலில்லாத வோங்காளம்
வெள்ளோங்காளம், }
வெள்ளோடன், ஓடுவிட்டுக்களருந்தேங்காய்
வெள்ளோந்தி, ஓரோந்தி
வெள்ளோலை, எழுதாவோலை, முத்திரையில்லாவோலை
வெறி, அச்சம், ஆடு, கலக்கம், கள், சீக்கிரம், நாற்றம், பிசாசம், மணம், வட்டவடிவு, வியாதி, வெறியென்னேவல், வேலனாடல்
வெறிகொள்ளுதல், சன்னதங்கொள்ளல், வெறித்தல்
வெறிக்கப்பார்த்தல், பயமுறுத்திப்பார்த்தல்
வெறிக்குணம், மலைதக்கொண்டகுணம், மருட்குணம், மூர்க்கருணம்

வெறிக்குதல், வெறிகொள்ளுதல்[து
வெறிது, அறிவின்மை,கோது,வறி
வெறித்தபார்வை, பயமுறப்பார்க்கும்பார்வை
வெறித்தல், ஆவேசமாதல், மயக்குறல், வெறிதாய்ப்போதல்
வெறிப்பு, பஞ்சம், மயக்கம், வெறித்தல், வெறுமைத்தன்மை
வெறியாடல், சன்னதமாடல், வெறிகொள்ளல் [ன்னதக்காரன்
வெறியாட்டாளன், உன்மத்தன், ச
வெறியாட்டு,உன்மத்தம்,சன்னதம்
வெறியெடுத்தல், சன்னதங்கொள்ளுதல், மலிதுக்கொள்ளுதல்
வெறிவிலக்கு,வெறியாட்டைத்தடுத்தல், இஃது அகப்பொருட்டுறையினொன்று [ல்
வெறு, வெறுமை, வெறுவென்னேவ
வெறுக்கை, கள், செல்வம், பொன், விழுப்பொருள்
வெறுங்கை, பொருளின்மை
வெறுத்தல், கோபித்தல்,சினத்தல், பகைத்தல்,மறுத்தல்,வேண்டாமை
வெறுநுகம், சோதினாள்
வெறுப்பின்மை, விருப்பம், இஃது அறத்துறுப்பினொன்று
வெறுப்பு, அச்சம், கலக்கம், சினம், செறிவு, துன்பம், வேண்டாமை
வெறுப்புக்காட்டுதல்,பிரியவினங்காண்பித்தல் [படல்
வெறுப்புக்கொடுத்தல், பிரியவினைப்
வெறுமனே, வெறிது
வெறுமை, இன்மை
வெறும்பிறுக்கு, வீண்வேடம்
வெறும்புறங்கூறல், அலர்தூற்றல்
வெறும்புறங்கூற்று, அலர்மொழி
வெறும்புறம்,ஒன்றுமில்லாதிருக்கை
வெறுவாயலட்டுதல், } வீண்பேச்
வெறுவாய்பசப்புதல், } சுப்பேசுதல்
வெறுவிலி, வறியவன்
வெற்பன், குறிஞ்சிநிலத்தலைவன்
வெற்பு, மலை
வெற்றம், சயம்
வெற்றாள், தனியாள்,வெறுவிலி
வெற்றி, வென்றி
வெற்றிகாணுதல், } வெல்லுதல்
வெற்றிகொள்ளல், }
வெற்றிக்கம்பம், வெற்றித்தம்பம்

வெற்றிக்கரந்தைமஞ்சரி, ஓர்பிரபந்தம், அஃது பகைவர்கொண்டதன்னிரைமீட்பான் கரந்தைப்பூமாலைசூடிப்போய் மீட்பதைக் கூறுவது [திரை
வெற்றிக்குதிரை, பந்தயம்வென்றகு
வெற்றிக்கொடி, விருதுக்கொடி
வெற்றிச்சீட்டு, பந்தயச்சீட்டில்வெற்றிகுறித்தசீட்டு
வெற்றித்தண்டை, வீரதண்டை
வெற்றித்தம்பம், வெற்றிக்கொடிகட்டுந்தூண், வென்றோர்நிறுத்துந்தூண் [டுமாலை
வெற்றிமாலை, போர்வென்றோருட்
வெற்றிலை, தாம்பூலம்
வெற்றிலைக்காய், மாற்றுவெற்றிலைக்கொடியின்காய் [டம்
வெற்றிலைக்கால், வெற்றிலைத்தோட்
வெற்றிலைக்கொடி, தாம்பூலவல்லி
வெற்றிலைக்கொழுந்து, வெற்றிலைக்கொடி
வெற்றிலைசுருட்டி, ஓர்புழு
வெற்றிலைச்சுருள்,ஓர்விதவெற்றிலைக்கட்டு, மணவாளர்கைபிற்பிடிக்குஞ்சுருள் [குந்தட்டம்
வெற்றிலைத்தட்டம், வெற்றிலைவைக்
வெற்றிலைத்தட்டி, வெற்றிலைச்சரை
வெற்றிலைத்தம்பலம், வெற்றிலைபாக்குமென்றசாரம்
வெற்றிலைநறுக்கி, ஓர்செடி
வெற்றிலைநாறி, ஓர்புதர் [ளொன்று
வெற்றிலைப்பூமணி, மாதராணிபணியி
வெற்றிலைவெடிபதம், மருந்தெண்ணெய்ப்பதத்தினொன்று
வெற்றிலைவைத்தல், கவியாணத்துக்குவரவழைத்தற்குறிப்பு [மாலை
வெற்றிவாகை, போர்வென்றோருசூ
வெற்றிவேற்கை, ஓர்நூல்
வெற்று,வெறு [ம்,வெறிதாயவுடல்
வெற்றுடம்பு, தசைப்பிடியற்றதேக
வெற்றெலும்பு, தசைகழிந்தவெலும்பு
வெற்றெனத்தொடுத்தல், நூற்குற்றம்பத்தினொன்று
வெற்றொழிப்பு, அபநுதியுருவகத்தொன்று, அஃது உபமானதருமத்தையாரோபித்தற்கு உபமேயதருமத்தையொழித்தல், (உம்) மதியன்றுவெண்கமலப்பூ

வென், முதுகு
வென்றி, வெல்வி
வென்றிமாலை, செந்திபுரபுராணஞ் செய்தோன், போர்வென்றோர்சூடுமாலை
வென்றோர், புலனடங்கப்பெற்றோர், வெற்றியடைந்தோர்
வென்றோன், அருகன்
வென்விடுதல், புறங்கொடுத்தல்

## வே

வே, ஓரெழுத்து, வேயென்னேவல், வேவு, வேவென்னேவல்
வேகசரம், ஒட்டகம்
வேகடம், ஓர்மீன், மணியழுக்ககற்றல், யௌவனம் [ன், வாலிபன்
வேகடன், மணியொப்பஞ்செய்வோ
வேகநாசனம், கோழை
வேகம், கடுமை, கதி, கோபம், சினம், சுக்கிலம், தீவிரம்
வேகரம், உக்கிரம், உறைப்பு
வேகரோதம், மலமறிப்புநோய் [று
வேகவதி, கம்பையாறு, வைகையா
வேகவத்தமம், மிருகதி
வேகவிதாரணம், தடை
வேகாகாதம், தடை, மலக்கட்டு
வேகாளம், சீக்கிரம்
வேகி, வேகமுடையோன்
வேகிதை, விரைவு
வேகித்தல், வேகமடைதல்
வேகுதல், அவிதல்
வேக்காடு, சூடு, வேகுதல்
வேக்காளப்படுதல், வெட்கப்படுதல், வெப்பியாரப்படுதல்
வேக்காளம், வெக்காளம்
வேங்கடம், ஓர்மலை, இஃது தமிழ்நிலத்தெல்லைகாண்கின்றது
வேங்கை, ஓர்மரம், புலி, பொன்
வேசகம், யானைவாலுணி, வால், வீடு
வேசடை, துக்கம்
வேசந்தம், குளம், தீ
வேசம், உடை, கதம், சம்பளம் வாயில், வீடு, வேசிதெரு, வேஷம்
வேசரம், ஒட்டகம்
வேசரி, கழுதை, கோவேறுகழுதை
வேசனம், மருதநிலத்தூர், வாயில், வீடு

வேசாடல், மனக்கலக்கம்
வேசாடை, துக்கம்
வேசாறல், } ஆறுதல், இளைப்பாறுதல், துக்கமடைதல்
வேசாறுதல், }
வேசி, விபசாரி, விலைமகள்
வேசிகை, வாயில்
வேசிதெரு, பரஸ்திரீகுடியிருப்பு
வேசித்தனம், கற்புத்தவறல், வேசித்தன்மை
வேசிப்பார்வை, புணர்ச்சிநோக்கு
வேசிப்பிள்ளை, கொண்டோற்பிழைத்துப்பெற்றபுத்திரன் [ன்னடை
வேசிமார்க்கம், தூர்த்தநடை, வேசி
வேசியம், வேசிதெரு, வேசிவீடு
வேசியாசனசமாசிரயம், வேசிவீதி
வேசியாசாரியன், நட்டுவன்
வேசியாடுதல், கற்பொழுக்கந்தவறிநடத்தல்
வேசியை, வேசை
வேசிவிலை, பணயம்
வேசிவிளையாட்டு, கணிகையர்கூத்து, வேசிநடை
வேசுமநகுலம், நாவி
வேசை, சம்பளம், வேசி
வேடகம், காதணி [ல்
வேடங்காட்டுதல், கோலங்காட்டுத
வேடசேரி, வேடனூர்
வேடச்சி, வேடப்பெண்
வேடதாரி, வேஷந்தரிப்போன்
வேடம், } ஆவேஷம், உடை, ஓர்காதணி, தன்கோலம்விட்டுவேறுகோலங்கொள்ளல்
வேஷம், }
வேஷகம், வேடகம்
வேடன், வேடுவன் [ம்பரம்
வேடிக்கை, அலங்காரவேஷம், ஆட
வேடிக்கைகாட்டுதல், ஆடம்பரங்காட்டல், கோலங்காட்டுதல்
வேடு, செம்முதல், பொட்டணி
வேடுகட்டல், } பொட்டணிகட்டல், வண்டுகட்டல்
வேடுகட்டுதல், }
வேடுவன், பாலைநிலமகன், வேட்டைக்காரன், வேட்டைவாளி
வேடை, அபேட்சை, காமநோய், செட்டித்தெரு, மரக்கலம், வெப்பம்
வேட்கை, ஆசை
வேட்கைத்துணைவி, மனைவி

வேட்கைப்பெருக்கம், காமநோய், பேராசை
வேட்கோபன், குயவன்
வேட்சை, அபேட்சை, புடைவை
வேட்டகம், தலைப்பா, புக்ககம்
வேட்டணம், காது, சுவர், சூழ்தல்
வேட்டம், சாரம், பிசின், வேட்டை
வேட்டல், ஆசைப்பெருக்கம், ஓமஞ்செய்தல், அஃது அந்தணர்வணிகர்க்குரியவறு தொழிலினொன்று, மாவையயாக்கைபதினென்குற்றத்தொன்று, விருப்பம், விவாகஞ்செய்தல் [திரர்
வேட்டார், சினேகிதர், புருடர், மித்
வேட்டாள், மனைவி
வேட்டி, சோமன்
வேட்டிதம், கூத்தின்விகற்பம், சூழ்வு, தடை, மடிப்பு
வேட்டியம், சுற்றல்
வேட்டு, வெடி, வேட்டென்னேவல்
வேட்டுவன், மகரான், வேடன், வேட்டைவாளி
வேட்டை, துன்பம், வேட்டம்
வேட்டைக்கடா, வேட்டைக்குப்பழக்கியகடா [வோர்
வேட்டைக்காரர், வேட்டையாடு
வேட்டைநாய், கடிநாய், வேட்டையாடப்பழக்கியநாய்
வேட்டைப்பல், வக்கிரதந்தம் [ல்
வேட்டையவியல், கூட்டிடாவவிய
வேட்டையாடல், } வேட்டஞ்செய்
வேட்டையாடுதல், } தல்
வேட்டைவாளி, ஓர்குளவி
வேட்டோர், வேட்டார்
வேட்டோன், சினேகிதன், புருடன்
வேட்பித்தல், ஓமஞ்செய்வித்தல், இஃது அந்தணரறுதொழிலினொன்று
வேட்பு, விருப்பம்
வேணகை, மதில், வேட்கை
வேணவா, ஆசைப்பெருக்கம்
வேணன், அம்பட்டத்திஇடத்திற்பார்ப்பானுக்குப் பிறந்து புகழ்ந்து பாடுவோன்
வேணி, ஆகாயம், இடையர்வீதி, சடை, மரவேர், யாறு
வேணிகை, சடை
வேணீர், தாகநீர்
வேணு, உட்டுளை, கலைஞானமறுபத்திநான்கினொன்று, புல்லாங்குழல், மூங்கில், வான், வில், வேய்ங்குழல்
வேணுகம், யானைத்தோட்டி
வேணுநாதன், வீணைவாசிப்போன்
வேண், அவா, கொடுந்தமிழ்நாட்டினொன்று, வேட்கைப்பெருக்கம்
வேண்டல், ஆசை, ஆசைப்பெருக்கம், இரத்தல், விரும்புதல்
வேண்டாத்தலையன், அஞ்சாதவன், முரடன்
வேண்டாமை, வெறுப்பு
வேண்டார், பகைவர்
வேண்டாவெறுப்பு, பகை, வேண்டாமென்றவெண்ணம் [டல்
வேண்டிக்கேட்டல், மன்றுடிக்கேட்
வேண்டுதல், வாங்குதல், வேண்டிக்கேட்டல் [றபடுத்தல்
வேதகம், கருப்பூரம், தானியம், வே
வேதகருப்பன், பார்ப்பான், பிரமன்
வேதகாரர், நெய்வார்
வேதகௌலேயகன், சிவன் [சியன்
வேதக்கொடியோன், துரோணுசா
வேதசங்கிதை, வேதத்திரட்டு
வேதசம், பிரம்பு, பெருவிரலடி
வேதசாத்திரம், வேதம் [ணவோன்
வேதசாத்திரி, வேதவியார்த்திபண்
வேதஞ்ஞன், வேதஅறிஞன்
வேதண்டம், கைலை, பொதியமலை, மலை, யானை
வேததத்துவம், வேதப்பொருள்
வேதநாதன், } கடவுள்
வேதநாயகன், }
வேதநிக்தை, வேதத்தையிகழ்தல் [தி
வேதநிருத்தன், சமணன், சூனியவா
வேதநீயம், உபாதியின்மை
வேதபாரகர், பார்ப்பார், வேதத்தைப்படிப்பிப்போர்
வேதபுண்ணியம், வேதானுசாரம்
வேதப்பொருத்தம், மணப்பொருத்தம்பத்தினொன்று
வேதமாதிரு, காயத்திரி
வேதமாயாவாதம், ஓர்சமயம்
வேதமுதல்வன், கடவுள்
வேதமுதல்வி, சரச்சுவதி, பார்வதி
வேதம், அறிவு, ஆழம், கலைஞானமறுபத்திநான்கினொன்று, துளைத்தல், முதனூல், விபரம்

வேதரஞ்சகன், பிரமா [காத்தல்
வேதரட்சணம், வேதத்தைப்பாது
வேதல், வெருதல், வேய்தல்
வேதவசனம், } திருவாக்கு
வேதவாக்கியம், }
வேதவரசன், பார்ப்பான்
வேதவித்தகன், வேதங்கற்றோன்
வேதவியாசன், ஓரிருடி, அவன் வேதஞ்செய்தோன்
வேதவிருத்தம், வேதபோதனை
வேதனம், அறிவு, ஓர்சடங்கு, கூலி, சம்பளம், சிவனம், துளைத்தல், பொன், விடயத்தான்வந்தஅறிவு, வேதம், வேதனை
வேதனுதானம், கூலிகொடாமை
வேதனி, கன்னவேதனக்கருவி
வேதனை, அலைத்தல், நோய், வருத்தம்
வேதனைக்காட்சி, காட்சிபேதத்தொன்று, அஃது இச்சாஞானச்செயலராகாதிசெலுத்தல்
வேதனைதிர்தல், மாயாமறைவுவிடுதல், வருத்தந்திர்தல்
வேதனைப்படுதல், உபாதிப்படுதல், மறைக்கப்படுதல்
வேதன், கடவுள், பிரமன், வியாழம்
வேதா, கடவுள், சூரியன், முனிவன்
வேதாகமம், வேதம்
வேதாங்கம், வேதசாத்திரம், வேதப்பகுதி, அஃது சங்தோபிசிதம்-சோதிடம்-நிகண்டு-திருத்தம்-மந்திரம்-வியாகரணம்எனுமாறுமாம்
வேதாதிவன்னன், கடவுள்
வேதாத்தியாபகன், வேதமோதுவிப்போன்
வேதாத்தியாபணம், வேதமோதல்
வேதாத்தியாயனம், வேதமோதல்
வேதாத்தியைபி, வேதமோதுவோன்
வேதாந்தகன், வைதிகன்
வேதாந்தசன், } வேதாந்தி
வேதாந்தஞ்ஞன், }
வேதாந்தம், வைதிகம்
வேதாந்தன், அரன், அருகன், கடவுள்
வேதாந்தி, வைதிகன்
வேதாப்பியாசம், வேதமோதல்
வேதாரன், பல்லி
வேதார்த்தன், கடவுள்
வேதாளம், ஓர்பிசாசம்
வேதாளி, காளி

வேதாளியர், புகழ்வோர்
வேதி, ஓமகுண்டம், கேட்டைநாள், மதில், வேதிகை, வேதியென்னேவல்
வேதிகை, கேடகம், திண்ணை, பலிபீடம், மேடை
வேதிகைபீடம், ஓமவேதி [பொருள்
வேதிதம், துளைத்தல், துளையுடைப்
வேதித்தல், விகாரப்படுத்தல்
வேதித்துவம், அறிவு
வேதியர், பார்ப்பார்
வேதினம், ஈர்வாள்
வேதிசன், பிரமன்
வேது, வெய்து
வேதை, இரேகை, துன்பம், பொன்னுக்கல், வேதித்தல்
வேதைச்சிந்தூரம், உலோகங்களைப்பொன்னாக்குமருந்து
வேதோதயன், சூரியன்
வேதோபகரணம், வேதானுசாரமானது [தக்கது
வேத்தியம், அடையாளம், அறியத்
வேத்திரயேம், ஓர்நகரம்
வேத்திரதரன், } கட்டியகாரன், நந்திதேவன், வாயில்காவலன்
வேத்திரதாரகன், }
வேத்திரம், அம்பு, இலக்கை, பிரம்பு
வேத்திராசனம், பிரப்பம்பாய்
வேந்தன், அரசன், இந்திரன், சந்திரன், சூரியன், வியாழன்
வேந்து, அரசன்
வேந்துரு, ஏழாந்தலைமுறைபிற்பிதா
வேந்தோன்றி, காந்தள்
வேபனம், பயம்
வேப்பம்பாசி, ஓர்நீர்ப்பூடு
வேமம், நெய்வார்கருவியிலொன்று
வேம்பனம், கள்
வேம்பாணி, கிருணி
வேம்பின்றுரோன், பாண்டியன்
வேம்பு, ஓர்மரம்
வேயர், வேவுகாரர்
வேயல், மூங்கில், வேய்தல்
வேயுள், வீடு [யென்னேவல்
வேய், உட்டுளை, ஒற்று, மூங்கில், வே
வேய்கள், வேவுகாரர்
வேய்ங்குழல், மூங்கிற்குழல்
வேய்தல், அணிதல், அலங்கரித்தல், சூடுதல், மூடுதல், வீடு
வேய்வு, ஏய்ப்பு, மூடுதல்

வேரகம், கருப்பூரம்
வேரடம், இலக்கைதப்பழம்
வேரம், சரீரம், சலஞ்சாதித்தல், செம்பு, மஞ்சல், முகில்
வேரல், மூங்கில்
வேரறுத்தல், அடிகெடுத்தல்
வேரி, கள், வாசனை, வெட்டிவேர்
வேரிபீதகம், இருவேலி
வேரோடுதல், தூர்விடுதல் [லைவ
வேர், மூலம், வேரென்னேவல், வேர்வை
வேர்க்குச்சு, ஓர்குச்சுப்புல்
வேர்க்குரு, வெகுர்
வேர்க்கொம்பு, இஞ்சி, சுக்கு
வேர்த்தல், கோபித்தல், வியர்த்தல்
வேர்ப்படலம், கண்ணோயொன்று
வேர்ப்பு, கோபம், வியர்வு
வேர்வு, மாலையயாக்கைபதினெண்குற்றத்தொன்று
வேர்வை, வியர்வை
வேலமரம், ஓர்மரம்
வேலம், தோட்டம்
வேலம்பாசி, ஓர்பூடு
வேலனுடல், தேவர்க்காடுங்கூத்து
வேலன், முருகன், வெறியாட்டாளன்
வேலாமூலம், கடற்கரை
வேலாவலயம், கடல், பூமி
வேலி, ஊர், காவல், நிலத்தளவையினொன்று, மதில்
வேலிக்கால், கதிகால், வேலியருகு
வேலிப்பருத்தி, உத்தமாகாணி
வேலிறை, குமரன்
வேலை, அவமிருத்து, இளைப்பாற்றி, எல்லை, கடல், கடற்கரை, கரை, காலம், தொழில், நிகழ்காலம், நோய், பணி, புனற்றிரை, பொழுது
வேலைப்பரிட்சை, வேலைப்பழக்கம்
வேலைபிற்றுயின்றோன், விட்டுணு
வேல், ஆயுதப்பொது, ஓர்மரம், கைவேல், சூலம், மூங்கில்
வேவித்தல், வேகச்செய்தல் [வல்
வேவு, ஒற்று, வேதல், வேவென்னே
வேழம், கரும்பு, கொறுக்கை, நாணல், மூங்கில், யானை
வேழம்பர், கழைக்கூத்தர்
வேளா, ஓர்மீன்
வேளாட்டி, வெள்ளாட்டி
வேளாண்குலர், குயவர்
வேளாண்மை, இகை, உபகாரம், கொடை, பூவைசியம், மெய்
வேளாண்மைமாந்தர், வேளாளர்
வேளாவலி, ஓரிராகம்
வேளாளர், இகையாளர், பூவைசியர்
வேளிர், குறுநிலத்தரசர்
வேளை, ஓர்பூடு, காலம், நேர்த்துகட்டுசெறவிளை
வேளைபூணல், மன்குறுதல்
வேளைப்பிழை, அரிட்டம் [ன்மதன்
வேள், ஆண்மகன், குமான், மண், ம
வேள்புலவரசர், சாளுவர்
வேள்வி, ஆராதனை, இகை, ஓமகுண்டம், மககான், யாகம்
வேள்விக்குண்டம், ஓமகுண்டம்
வேள்வித்தறி, யாகத்தம்பம்
வேள்விநாயகன், இந்திரன் [பார்
வேள்வியாளர், இகையாளர், பார்ப்
வேள்வு, அரும்பண்டம்
வேள்வெடுத்தல், பலபண்டத்தேடிக்கொண்டுபோதல்
வேறல், வெல்லுதல்
வேறுதல், பிரிதல்
வேறிடம், ஏகாந்தம் [து
வேறு, மற்றது, வேற்றுமையுடைய
வேறுபடுதல், பிரிதல்
வேறுபடுத்தல், பிரித்தல்
வேறுபாடு, வேறுபடல்
வேறுபாட்டொழிப்பு, அபறுதியலங்காரத்தொன்று, அஃது வன்னியத்திலாரோபித்தற்பொருட்டுஅவன்னிய தருமத்தைபொழித்தல், (உம்)தெரியுமதுதிங்களன்றரிவைமுகமேதிங்களாம்
வேற்றலம், காற்று
வேற்றுக்குரல், மாறுகுரல்
வேற்றுநிலைமயக்கு, கசதபவொழிந்தமெய்கள்தம்முடன்விரவிமொழிக்கிடைவிரவிவருவது [காரம்
வேற்றுப்பொருள்வைப்பு, ஓரலங்
வேற்றுமணாளன், பரபுருடன்
வேற்றுமை, பதங்கள்புணருமிருவகைச்சந்தியுளொன்று, அஃது எழுவாய்முதலியவுருபுகள்பெறநிற்பது, வேறுபடல், வேற்றுமையணி
வேற்றுமைகாட்டுதல், வித்தியாசங்காட்டல்
வேற்றுமைத்தொகை, வேற்றுமையுருபுகள்தொக்குநிற்பது

வேற்றுமைப்புணர்ச்சி, பெரும்வினி
யுமல்லாதவாறுருபும் விரிக்தேனு
க்தொக்கேனும்புணர்வது
வேற்றுமைமயக்கு, வேற்றுமையுரு
புகளுளொன்றுபிறிதொன்றற்கா
கமயங்கிநிற்பது
வேற்றுமையணி, ஓரலங்காரம், அ
ஃது உபமானுபமேயங்களுளொ
ன்றைவிசேடமுடைத்தாய்ச்சொ
ல்லுதல்
வேற்றுமையுருபு, தன்னைபேற்றபெ
யர்ப்பொருளைவேறுபடுத்துவது,
அஃது ஐ,ஆல்,கு,இன்,அது,கண்
வேற்றுமைவிரி, வேற்றுமையுருபுவி
ரிந்துநிற்பது
வேற்றுரு, மறுருபு
வேற்றொலிவெண்டுறை, பலஓசைத்
தாய்வரும்வெண்டுறை
வேனல், கானல்
வேனிலாளி, மன்மதன்
வேனில், கோடை
வேனிற்காலம், கோடைகாலம்
வேனின்மாலை, ஓர்பிரபந்தம், அஃ
து இருவேனிலையுஞ்சிறப்பித்துப்
பாடுவது

## வை

வை, ஓரெழுத்து, கூர்மை,புல்,வை
க்கோல், வையென்னேவல்
வைகடசம், உத்தரியம்
வைகடிகன், இரத்தினங்கள்சாணை
திர்ப்போன் [ன்று
வைகரி, திட்டம், வாக்குநான்கினொ
வைகரியாங்காரம், மூவாங்காரத்
தொன்று [டியல்
வைகல், கழிவுநாள், தங்கல், நாள்,வி
வைகல்வியம், கலக்கம், குறைவு, கு
ணியம், தகுதியின்மை
வைகறை, விடியமுதற்பத்துநாழி
கையளவுகாலம், விடியற்காலம்
வைகற்பிகம், ஐயம்
வைகாசம், ஓர்மாதம், விசாகம், வி
டியற்காலம், வைணவாகமபிரண்
டினொன்று [று
வைகாநசம், வைணவாகமத்தொன்
வைகாசி, ஓர்மாதம், விசாகம்
வைகாசிவசந்தன், வைகாசிமாதத்
திற்பாயுங்காவிரியாறு
வைகாநசன், வனவாசி
வைகாலம், சாயங்காலம்
வைகிராந்தம், ஓரிரத்தினம்
வைகிருதம், } வெறுப்பு
வைகிருத்தியம், }
வைகுண்டம், திருமாநகரம்
வைகுண்டன், திருமால்
வைகுண்ணியம், ஒவ்வாமை, குணமி
ன்மை, குறை
வைகுதல், இருத்தல், ஏகுதல்
வைகுந்தநாதன், திருமால்
வைகுந்தம், வைகுண்டம்
வைகுல்வியம், } எதிரிடை
வைகூலியம், }
வைகை, ஓராறு
வைகைத்துறைவன், பாண்டியன்
வைக்கல், வைக்குதல், வைக்கோல்
வைக்கிராந்தம், ஓர்பாஷாணம்
வைக்குதல், வைத்தல்
வைக்கோல், வைக்கல்
வைக்கோல்வாரி, ஓர்கம்பு
வைக்கோற்கந்து,வைக்கோற்திரள்
வைக்கோற்பழுதை, வைக்கோற்புரி
வைக்கோற்பாம்பு, வேஷம்
வைக்கோற்புரி, வைக்கோல்முறுக்கு
வைங்கியாரம், பகை
வைசத்தியம், உண்மை, சுத்தம்
வைசந்திரம், அரசாட்சி
வைசம்பாயனன், வியாசன்மாணாக்
கர்நால்வருளொருவன்
வைசயந்தம், இந்திரனுப்பரிகை,இ
ந்திரன்கொடி, இந்திரன்மாளிகை
வைசயந்தி, திருமான்மாலிகை, து
கிற்கொடி
வைசயந்திகன், கொடிக்காரன்
வைசயந்திகை, துகிற்கொடி
வைசனனம், பின்ளைப்பெறுமாதம்
வைசாகம்,வைகாசிமாதம்,விசாகம்
வைசாகி, வைகாசி
வைசிகம், உடலுபிரைப்பிரித்தறித
ல்,தளிர், முகாந்தரம்,வேசித்தனம்
வைசியக்கிரியை, வேளாண்மை, வி
யாபாரம் [டிகள்
வைசியர், இடையர்,ஏருழவர், செட்
வைசியவிருத்தி, வைசியர்தொழில்
வைசுவதேவம்,ஓமப்பலி,பிதிர்பூசை
வைசூரி, வசூரி
வைசேடிகம்,சாத்திரமாறினொன்று

வைச்சிரம், வச்சிரம்
வைச்சிரவணன், குபேரன்
வைச்சிரவணாலயம், ஆலமரம்
வைடம்மியம், பகை, அஃது சத்த
  விசனத்தொன்று
வைடாலக்கிரதிகன், மாயக்காரன்
வைடாலம், பூனை, மாயசாலம்
வைடாலவிரதிகன், மாயசாலன்
வைடூரியம், நவமணியிலொன்று
வைணவம், } ஓர்சமயம், பதினெ
வைஷ்ணவம், } ண்புராணத்தொன்
  று, மூங்கிலரிசி, வேய்ங்குழல்
வைணவர், நாராயணன்சமயத்தோர்
வைணவாகமம், வைஷ்ணவசமயநூ
  ல், அஃது பாஞ்சராத்திரம், வை
  காநசம்
வைணவி, சத்தமாதர்களிலொருத்
  தி, மூங்கிற்குழல்
வைணவிகன், வீணைவாசிப்போன்,
  வேய்ங்குழலூதுவோன்
வைணிகன், வீணைவாசிப்போன்
வைணுகம், கழிகோல், யானைத்தோ
  ட்டி
வைதரணி, யமபுரத்தியாறு
வைதருக்கம், தந்தரப்பேச்சு
வைதருப்பம், வஞ்சகத்தருக்கம்
வைதருப்பி, தமையந்தி
வைதலம், பாத்திரம்
வைதல், ஏசல், திட்டல்
வைதவ்வியம், கைமைத்தன்மை
வைதனிகம், அற்றைக்கூலி
வைதனிகன், கூலிக்காரன்
வைதாத்திரன், சனற்குமாரன்
வைதானம், } ஓமப்பலி
வைதானிகம், } [வோன்
வைதானிகன், பள்ளியெழுச்சிபாடு
வைதாளுபசரணை, அக்கினிசந்திசெ
  லுத்துங்கடவுட்பலி
வைதிகர், பார்ப்பார்
வைதிருதி, நித்தியயோகத்தொன்று
வைதிகம், வேதமார்க்கம்
வைதிகர், வைதிகசைவத்தோர்
வைதூரியம், ஓரிரத்தினம்
வைதேகன், பார்ப்பனத்திக்கும்வை
  சியனுக்கும்பிறந்துதுதித்துய்வோ
  ன், வியாபாரி
வைதேகி, சீதை
வைதேயம், அறிவின்மை
வைதேயன், அறிவீனன்
வைத்தல், வைக்குதல்
வைத்தியசாத்திரம், கலைஞானமறு
  பத்திநான்கிலொன்று, அஃது வா
  கடநூல்
வைத்தியநாதன், சிவன்
வைத்தியம், பரிகாரம்
வைத்தியன், பண்டிதன், பரிகாரி,
  வேதசாப்பியாசி
வைத்தூறு, வைக்கோற்போர்
வைநாசிகம், ஓர்யோகம்
வைநாசிகன், அடிமை, சிலம்பி
வைநாயிகன், புத்தன்
வைநீதகம், இரிணைமூவிணைஎருதே
  னுங்குதிரையேனுங்கட்டியபண்டி
வைந்தவம், குதிரை
வைபரித்தியம், எதிரிடை
வைபவம், வரலாறு, விபவம்
வைபோகம், சந்தோஷம், வயணம்,
  விவேகம்
வைபோகி, விவேகி
வைபோதிகன், சாமக்காவற்காரன்
வைப்பாட்டி, குடிப்பெண்ணல்லா
  தவள்
வைப்பு, இடம், ஊர், உண்டாக்க
  ல், பெருமை, வைத்தல்
வைப்புக்கட்டு, பொய்க்கதை [கு
வைப்புச்சரக்கு, உண்டாக்கினசரக்
வைப்புச்செப்பு, வைக்குமிடம் [ன்
வைமாத்திரேயன், சக்களத்திபுத்திர
வையகம், } உரோகணி, சிவிகை, த
வையம், } ண்டிகை, தேர், பண்
  டி, பாண்டில்பூண்டவூர்தி, பூமி,
  வாகனம்
வையாகரணம், வியாகரணம்
வையாகரணன், வியாகரணம்படித்
  தோன்
வையாளிவீதி, குதிரைநடத்தும்வீதி
வைரகரம், பகைசாதித்தல்
வைரகரன், சத்துரு
வைரசுத்தி, பகைதீர்த்தல்
வைரநிரியாணம், பகைநீக்கல்
வைரம், நவமணியிலொன்று, பகை,
  விரோதம், வீரம்
வைரவம், பைரவம்
வைரன், } சத்துரு
வைரி, }
வைரவன், பைரவன்

வைராகம், விராகம்
வைராகி, துறவி
வைராகிகன், துறவி
வைராக்கியசதகம், ஓர்செய்யுள்
வைராக்கியம், பகை, வெறுப்பு
வைராக்கியம், ஆசையற்றிருத்தல்
வைராயமாணம், சத்துருத்தனம்
வைராவி, வயிரமனதுடையோன்
வைரி, சத்துரு
வைரிதை, வன்மம், வீரம்
வைரியம், வீரியம், வைராக்கியம்
வைரூப்பியம், அவலட்சணம்
வைரோசனநிகேதனம், பாதலம்
வைரோசனன், சூரியன், மாவலி, வாலி
வைரோசனி, புத்தன், மாவலி, வாலி
வைரோதாரம், பழிவாங்கல்
வைலட்சணம், அவலட்சணம் [ம்
வைலட்சயம், எதிரிடை, வித்தியாச
வைலவம், வில்வம்
வைவாகிகம், விவாகம்
வைவு, ஏச்சு, சாபம் [ன்
வைவைச்சுதன், ஓர்மனு, சனி, நம
வைனதகம், செப்புபாத்திரம்
வைனதேயன், கருடன்
வைனம், பருத்தல்

## வோ

வோரகம், } எழுத்து
வோலகம், }

## வௌ

வௌ, ஒலிக்குறிப்பு, ஓரெழுத்து, வௌவென்னேவல்
வௌவல், } கொள்ளையிடல், திரு
வௌவுதல், } டல், பிடித்தல், வாருதல்
வௌவால், ஓர்பறவை

# அனுபந்த அகராதி.



*அ, இன்மை-எதிர்மறை-குறைவு-நடை-பிறிது-வியப்பு இவற்றைக் காட்டுமோருபசருக்கம், ஓரெழுத்து, பெயரெச்சவிகுதி, வினையெச்சவிகுதி
*அஃகல், சுருங்கல்
*அஃகேனம், முள்ளில்லாப்பன்றி
அகக்கடவுள், மனம்
*அகக்காழ், வச்சிரக்கல்
அகங்கரிப்பு, மனவெறுப்பு
*அகங்களித்தல், மனமதர்த்தல்
அகங்காரக்கிரந்தி, ஆணவமறைப்பு, மாயாபாசமும்மலத்தொடக்கு
அகங்காரத்திரயம், முக்கியவகங்காரம்- முக்கியாமுக்கியவகங்காரம்- அமுக்கியவகங்காரம் எனமூன்று
அகங்காரி, அகங்காரமுடையது
அகசியம், வேடிக்கை
அகசு, பகல், பொழுது
அகச்சுட்டு, சொல்லகத்துமுதலிலையாயவைக்குறிக்குஞ்சுட்டு
*அகடம், அநீதம்
*அகடு, சீர், மேடு
அகடூரி, பாம்பு [னார்
*அகணி, தெங்குபனைமுதலியவற்றி
அகணிதபஞ்சாங்கம், அலகிடாது சொல்லும்பஞ்சாங்கம்
அகணிதபஞ்சாங்கி, கணியாதுபஞ்சாங்கஞ்சொல்வோன்
*அகண்டம், மண்ணகல்
அகண்டன், அருகன், கடவுள், சிவன், விட்டுணு
அகண்டாகாரவிருத்தி, அஞ்ஞானநீக்கிச் சிவசாட்சியைத்தோற்றுவிப்பது
*அகண்டிதம், ஏற்றுக்கொள்ளல், கண்டிப்பில்லது, கூறுபடாமை
அகதங்காரன், வைத்தியன்
அகதம், ஓர்குளிகை, சுகம்
அகதேக, பிணியில்லான்
அகத்திணை, உள்ளொழுக்கம்
அகத்திணைப்புறம், கைக்கிளையும்பெருந்திணையும் [வன்
அகத்தியன், சத்தவிருடிகளிலொரு
அகப்பற்று, மனவிருப்பு [ச்சியானது
அகப்பாடு, அகப்படுதல், உள்ளிகழ்
அகப்பாட்டுவண்ணம், முடியாதுபோன்றுமுடிவது
அகப்பாட்டுறுப்பு, திணைமுதற்றுறையீறுகக் கூறப்படுமுறுப்புப்பன்னிரண்டும்
அகப்புறக்கைக்கிளை, காமஞ்சாலாவிளமைத்தன்மையுடையதலைமகள்பக்கத்துத்தலைமகன்குறிப்பினையறியாதுஅவளோடுமேன்மேலுங்கூறுவது [ருந்திணையும்
அகப்புறத்திணை, கைக்கிளையும்பெ
அகப்புறப்பாட்டு, மடலேறுதன்முதலாகத்தபுதார்நிலையீறுகச்சொல்லப்பட்டவியற்பெயர்க்கோடாமையாம்
அகப்புறப்பெருந்திணை, அகன்றுழிக்கலங்கன்முதலாகத் தலைவியுந்தானும்வனமடைந்துதோற்றவீறுகச்சொல்லப்பட்டனவும்பிறவுங்கூறுதலாம்
அகப்புறப்பொருள், கைக்கிளையும் பெருந்திணையும் [தம்
அகப்பொருட்கோவை, ஓர்பிரபந்
அகமரிஷணம், அகங்கையுணீர்விட்டு மூக்குநாசியில்வைத்துச்செபித்தல்
*அகம், ஆன்மா, உபத்திரவம், ஏழ

* இவ்வடையாளமொழிகள்முதற்பிரதியினுமுண்டு.

அருபு, ஓர்மரம், குணுகுணம், சூரியன், பாம்பு, மலை, வருத்தம்
*அகம்பிரமம், நாமேபிரமமெனல்
அகம்மதி, அறியாமை, தற்பிரியம்
*அகரம், வீடு
அகரீஷணம், துக்கம், வெறுப்பு
அகருதம், வீற்றிருத்தல்
*அகர்த்தத்துவம், செயவின்மை
அகர்த்தனன், குள்ளன் [யன்
அகர்த்தா, பஞ்சகோசங்கட்கன்னி
அகர்த்தியம், கிருத்துவம்
அகர்ப்பதி, } சூரியன்
அகர்மணி, }
அகர்ம்முகம், வைகறை
*அகலம், தாவை
*அகலல், விருத்தித்தல்
அகல்வு, அகலம், அகலல்
அகவுரிச்சீர், இரசைச்சீர்
அகவலோசை, ஆசிரியப்பாவிற்குரியவோசை
அகவற்சுரிதகம், ஆசிரியச்சுரிதகம்
அகவற்பா, ஐந்துபாவிலொன்று, அஃது நாற்சீரான்வருமளபடியாயும் இயற்சீர்பயின்றும் அயற்சீர் விரவியுந் தன்றளைதழுவியும் பிறதளைமயங்கியும் கருவிளங்கனிகூவிளங்கனியென்னு மிருசீர்கலவாது மூன்றுமுதலியபல வடிகொண்டுமுடிவது
அகவற்றள்ளல், வெண்டளையுங்கலித்தளையும்விரவிவருவது
அகவற்றூங்கல், ஒன்றுதவஞ்சித்தளையான்வருவது
அகளங்கமூர்த்தி, புத்தன்
அகளங்கம், சிதாங்கபாஷாணம்
*அகளங்கன், புத்தன்
*அகனி, மிடா
அகன்மக்கத்திருப்பிரயோகம், செயப்படுபொருளிலாவினை, (உம்) நடந்தான்
*அகன்றில், ஆண்அன்றில்
அகன்னம், செவிடு
அகாசரம், அறியாமை
அகாண்டபாதசாதம், சாதமரணம்
அகாதத்துவம், ஆழம்
அகாதம், மூக்கு
அகாதிதம், பட்சித்தல்
அகாத்தியம், பொல்லாங்கு, வஞ்சனை

அகாந்துமசை, பார்வதி
அகாரணம், காரணமின்மை
அகாரணன், ஏதுவில்லான்
அகாரத்திரயவித்தை, பஞ்சாக்கரவித்தைகளிலொன்று
*அகாரியம், துற்செய்கை
அகாலமிருத்து, அநியமமரணம்[ணி
*அகி, இராகு, இயம், சூரியன், பிரபா
அகிகாசதம், காற்று
அகிகை, பட்டுப்பருத்தி
அகிஞன், தரித்திரன்
*அகிதம், தியானம், போசனம்
அகிபதி, சேடன்
அகிபுசம், கருழன், மயில்
அகிபேனம், அவின், பாம்பினஞ்சு
அகிரன், சூரியன், தீ
அகிருதம், மூற்றுவேலை
அகிருதித்துவம், அந்தக்கேடு
அகுணம், குணமின்மை, குறைவு, துற்குணம்
அகுப்பியம், பொன், வெள்ளி
அகுலீனம், குலவீனம்
அகூடகந்தம், பெருங்காயம்
அகேசன், மொட்டையன்
அகேது, முகாந்திரமின்மை
*அகைத்தல், உயர்த்தல்
அகைப்பு, அடி, அறுத்தல், எழுச்சி
அகைப்புவண்ணம், அறுத்தறுத்தொழுகும்வண்ணம்
அகோடம், கமுகு [று
*அகோரம், சிவனைம்முகத்தொன்
அகோரை, உட்டணகாள்
அக்ககன்னம், அட்சரேகை
*அக்கதம், பங்கப்படாதது, பழுதின்மை
அக்கதயோனி, கன்னி வோன்
அக்கதூர்த்தன், அத்தகாசஞ்செய்
அக்கபாடம், மற்களரி
அக்கமம், பொறுமை
*அக்கம், ஆன்மா, உப்பு, ஓர்நிறை, சில்லு, சொக்கட்டான்காய், ஞானம், தரிசு, தேருருப்பு, தேர், பாம்பு, வழக்கு
*அக்கரம், ஆகாயம், பிறவியறுத்தல்
அக்கரன், சிவன், திருமால், பிரமம்
அக்கராந்தம், எழுத்தொலி
அக்கவாடம், மற்களரி
*அக்கன், கருடன், குருடன்

அக்காகிரம், பண்டிபச்சு, பண்டி யின்முற்பக்கம்
அக்கிக்கல், ஓரிரத்தினம்
அக்கிதாரை, கண்மணி
அக்கிபடலம், கண்ணோயுளொன்று
அக்கியாதி, துற்கீர்த்தி
அக்கிரகரம், கைநுனி, வலக்கை
*அக்கிரகாரம், தலைச்சேரி
அக்கிரசங்கை, அக்கிரசம்பாவனை, முன்றொடை
அக்கிரசந்தானி, நமன்கணக்கு
அக்கிரசன், அண்ணன், பிராமணன்
அக்கிரசன்மன், அண்ணன், பிரமா, பிராமணன்
அக்கிரசாதகன், } பார்ப்பான்
அக்கிரசாதி, }
அக்கிரநிரூபணம், முன்னிருபித்தது
அக்கிரபாகம், நுனி, முதற்பங்கு,முன்பக்கம்
அக்கிரபாணி, கைநுனி, வலக்கை
*அக்கிரமம், ஒழுங்கின்மை
அக்கிரமாமிசம், இரத்தாசயம்
அக்கிராதம், கோபமின்மை
அக்கிராத்தம், கைநுதி, வலக்கை
அக்கிராந்தம், செம்பு
அக்கிராரம்,அக்கிரகாரம்,விளைநிலம்
அக்கிரியன், தலைமயன்
அக்கிரு, விரல்
அக்கிரேவணம், காட்டோரம் [னி
*அக்கினி,பித்தம், பொன், மூலாக்கி
அக்கினிகணம், தீப்பொறி, நிரைநே ர்நிரைக்கணம் [காந்தம்
அக்கினிகருப்பம், கடலுரை, சூரிய
அக்கினிகருப்பன், குமரன்
அக்கினிகோணம், தென்கீழ்
*அக்கினிகோத்திரம்,தீ,நெய்,யாக மிருபத்தொன்றினொன்று
அக்கினிசகன், காற்று
அக்கினிசகாயம், காற்று
அக்கினிசன்மன், குமரன்
அக்கினிசாலம், ஓர்பூடு [ச்கு
அக்கினிசிகம், அம்பு, வாணம், விள
அக்கினிசேகரம், மஞ்சள்
அக்கினிச்சுவாலை, தீக்கொழுந்து
அக்கினிட்டோமம்,யாகமிருபத்தொ ன்றினொன்று
அக்கினித்ரேதை, திரியாக்கினி
அக்கினித்திராவகம், ஓர்திராவகநீர்

அக்கினிபரிச்சதம், ஓமோபகரணம்
அக்கினிபரீட்சை, மழுவேந்தன்முத லியவித்தை [சை
அக்கினிபோஷணம், வைசுவதேவபூ
அக்கினிப்பிரத்தரம், தீக்கல்
அக்கினிமணி, சூரியகாந்தம்
அக்கினிமண்டலம், மும்மண்டலத் தொன்று, அஃது மூலாதாரமுத லுபிக்கமலமளவும்
அக்கினிமாருதி, அகத்தியன்
அக்கினிமுகம், சேங்கொட்டை
அக்கினிமுகன், தீ, பார்ப்பான்
அக்கினியாகாரம், ஓமசாலை [த்தல்
அக்கினியாதானம், ஓமாக்கினிவளர்
அக்கினியாதேயம், நித்தியதீவளர்த் தல்,யாகமிருபத்தொன்றினொன்று
அக்கினியாலயம், அக்கினியாகாரம்
அக்கினியின்குணம், ஆலசியம்-தாக ம்-நித்திரை-பசி-மைதுனம்
அக்கினியின்கோபம், பித்தம் [னி
அக்கினியுற்பாதம், விண்வீழ்கொள்
அக்கினிவருத்தனம், தீவளர்த்தல்
அக்கினிவல்லபம், கீல்
அக்கினிவாகம், } புகை
அக்கினிவாகு, }
அக்கினிவிசர்ப்பம், வீரணக்கொதி
அக்கினிவீசம், } பொன்
அக்கினிவீரியம், }
அக்குருக்கி, சயரோகம்
அக்கை, அவ்வை
அக்கோடகம், } கடுக்காய்
அக்கோடம், }
அக்கோணி, பத்துநூறுபிரத்தொன் பதினாயிரத்து முந்நூற்றைம்பது காலாளும் அறுபத்தையாயிரத்து அறுநூற்றறுபதுகுதிரையும் இரு பத்தையாயிரத்து எண்ணூற்றெ ழுபது இரதமும் இருபத்தோராயி ரத்துஎண்ணூற்றெழுபது யானை யுங்கொண்டது [தூண்
அக்கோபம், உறுதி, யானைகட்டுக்
அக்கௌகிணி, அக்கோணி
அங்ககம், அங்கம் [நயம்
அங்ககாரம், அங்கசேட்டை, அபி
அங்கசங்கம், புணர்ச்சி
அங்கசம், உதிரம்,உரோமம், காம ம், நோய்
*அங்கணம்,பத்துமுழத்தளவு

அங்கணன், அருகன், சிவன், மிருத
பாஷாணம், விட்டுணு
அங்கணி, காளி, பார்ப்பதி
அங்கண், அவ்விடம்
*அங்கதம், மார்பு
அங்கதி, கொடை, தீ, நோய், பார்
ப்பான், பிரமா, வாயு, விட்டுணு
அங்கதை, தென்றிசையானைக்குப்
பெண்யானை
அங்கபாலி, } கட்டித்தழுவுதல்
அங்கபாலிகை, }
*அங்கம், அத்தியாயம், அலங்கரிப்
பு, ஆறங்கம், ஓர்விளையாட்டு, கு
ற்றம், சமீபம், தங்குமிடம், தாள
ப்பிரமாணம்பத்திலொன்று, பரத
வுறுப்புளொன்று, மனம், வரி
அங்கரட்சணி, யுத்தகவசம்
அங்கருகம், உரோமம்
அங்கவம், பழவற்றல்
அங்கவிட்சேபம், அபிநயம்
அங்கவித்திகை, கணிதம்
அங்கஞகணம், மாதர்கூட்டம்
*அங்கனை, ஓரிராசி, வடதிசையானை
க்குப்பெண்யானை [த்தல்
அங்காப்பு, அண்ணாத்தல், வாயதிற
அங்காரதானிகை, குட்டடுப்பு, தீச்
சட்டி
அங்காரபரிபாசிதம், பொரிக்கறி
அங்காரம், கரி, தீ
அங்காரன், அங்காரகன்
அங்காரிகை, கரும்பு
அங்காவணம், பஞ்சதருவின்பக்தர்
அங்கிகரிப்பு, எற்றுக்கொள்ளல்
அங்கிட்டோமம், கோமேதகம்
அங்கிரகம், சரீரநோ [டி
*அங்கிரி, மரமூலம், மூன்றுகாவிரு
அங்கிரிநாமகம், மரமூலம்
அங்கீகரணம், சம்மதித்தல்
அங்கீகரித்தல், எற்றுக்கொள்ளல், ச
ம்மதித்தல் [ம்
அங்கீகாரம், சம்மதி, வாக்குத்தத்த
அங்குசகிரகன், யானைப்பாகன்
அங்குசதாரி, தானகம், யானைப்பா
கன், விநாயகன்
அங்குசபாசமேந்தி, விநாயகன்
அங்குசபாணி, க:ளி, விநாயகன், வீ
ரபத்திரன்
அங்குசன், சரகாண்டபாஷாணம்
அங்குடம், துறப்பு
அங்குஷ்டம், பாண்டுவிபார்தி
அங்குட்டான், விரலுறை
அங்குரகம், கூடு
*அங்குரம், உரோமம், தளிர், நக்கூ
ரம், நீர்
அங்குரி, விரல்
அங்குரீயம், அங்குலியம்
*அங்குலம், பெருவிரல், விரல் [றகி
*அங்குலி, ஐவிரலிச்செடி, துதிக்கை
அங்குலிசந்தேசம், விரனொடித்தல்
அங்குலிதோரணம், திரிபுண்டரம்
அங்குலித்திரம், விரற்புட்டில்
அங்குலிபஞ்சகம், ஐந்துவிரல்
அங்குலித்திராணம், விரற்புட்டில்
அங்குலிமுகம், விரனுனி [ம்
அங்குலிமுத்திரை, முத்திரைமோதிர
அங்குலிமோடனம், விரனொடித்தல்,
விரலாற்றெறித்தல்
அங்குலீகம், } மோதிரம்
அங்குலீயகம், }
அங்கூசம், அங்குசம்
அங்கூடம், அம்பு, கீரி
அங்கூரம், தளிர்
அங்சம், அமிசம்
அசகம், வரையாடு
அசகவம், சிவன்வில், அஃது இருத
லிதிருமாலும்நடுப்பிரமனுமாயிரு
ப்பது [ன்
அசங்கச்சித்தன், அஞ்ஞானமனத்த
*அசங்கதம், வெறுப்பு [மை
அசங்கதி, இணக்கமின்மை, ஒவ்வா
*அசங்கமம், புலவி [ன்மை
*அசங்கம், தனிமை, நிச்சயம், பயமி
அசங்கற்பம், உண்மை, முன்னிதா
னிப்பின்மை [ன்
அசங்கன், அஞ்ஞானன், ஒட்டாதவ
அசங்கை, சங்கையீனம்
அசங்கோசம், அடக்கமின்மை
அசசிவிகன், ஆட்டுக்காரன்
அசஞ்சிதன், முத்தன்
அசதாசாரம், துன்னடை
அசதிசுதன், சோரபுத்திரன்
அசத்திலட்சணம், அசம்பவம்
அசத்துரு, சந்திரன், மித்துரு
அசத்தை, சூனியம், பிரவஞ்சம்,
பொய் [சொல
அசந்தம், உயிரெழுத்தில்முடியுஞ்

விரிவு, அகலம், இடம்பாடு, விசாலம், விபுலம், வியல்

விருச்சிகவிராசி, தேளுக்கால், தேள், பறப்பன்

விருத்து, மகமுறை

விலங்கிறுட்கொம்பிலாவிலங்கு, குமரம்

விலங்கிறுவிலைநகர்விலங்குவைவு, குளகு

விலங்கின்கூட்டம், கணம், குலம், சாலம், யூதம், வியூகம், விருந்தம்

விலங்கின்கொம்பு, உலவை, கோடு, சிருங்கம், மருப்பு, விடாணம்

விலங்கின்படுக்கை, சேக்கை, பட்டம், பளை, பண்ணை, பாழி, போத்து

விலங்கின்பொது, குரங்கம், மா, மான், மிருகம், இவற்றிலாண்பொதுப்பெயர், ஆண், பெண்பொதுப்பெயர், பிணவல், பிளு, பெண்

விலங்கின்வகுப்பு, அணில், ஆடு, குறும்பாடு, செம்மறியாடு, வெள்ளாடு, எருது, எருமை, எலி, காரெலி ஒட்டகம், கத்தூரிப்பிள்ளை, கரடி கவரிமா, கழுதை, கோவேறுகழுதை, காட்டா, கீரி, குதிரை, குரக்கு, சிங்கம், நரி, நாய், செந்நாய், நீர்நாய், நாவிப்பிள்ளை, பசு, பன்றி, முட்பன்றி, புலி, புல்வாய், பூனை, பெருச்சாளி, மரை, மான், முசு, முயல், மூஞ்சூறு, யாளி, யானை, இவைதத்தம்வரியிற் காண்க

வில், கார்முகம், கொக்கரை, கொடுமரம், கோதண்டம், சராசனம், சாபம், சானகம், சித்துவாரம், சிலை, தடி, தவர், தனு, துரோணம், முனி, வேணு, அன்றியுஞ்சிவன்வில், பினாகம், திருமால்வில், சாரங்கம், அருச்சுனன்வில், காண்டீபம்

வில்லின்குதை, குலை, தாறு

வில்வமரம், கூவிளம், கூவிரம், கூவிளை, மாலூரம், மாவிலம், வில்லுவம்

விவாகமில்லான், பிரமசாரி

விவாகம், உபயமம், கடி, கலியாணம், கைப்பற்றல், திவலநூசெய்தல், பரிணயம், மங்கலம், மணம், மன்றல், வதுவை, விதிபுணர், வேட்டல்

விழல், விரணம்

விழுங்கல், நுகர்தல், நுங்கல், சொண்டல்

விழுதல், சோர்தல், நாலல், வீழ்தல்

விளக்கு, இராவணம், ஒளி, சுடர், தீபம், தீபிகை

விளக்குத்தண்டு, கம்பம், கௌசிகம், சுடர்நிலை, தனி, தீபமத்திகை, மல்லிகை

விளாமரம், கபித்தம், விளவு, வெள்ளில்

விளையாட்டு, ஆடல், இலீலை, உண்டாட்டு, உப்பு, ஓரை, கிரீடை, கெடவரல், கேலம், கேளி, தருணம், தொடலை, பண்ணை, விலாசனை, இவற்றுண்மகளிர்விளையாட்டு, உண்டாட்டு, உப்பு, ஓரை, கெடவரல், தொடலை, பண்ணை, பொய்தல், வண்டல்

விளைவு, போகம், வளாவல்

விறகு, இத்தனம், ஈமம், சட்டை, சாட்டம், முருடு, முளரி, அன்றியு மோமவிறகின்பெயர், சமிதை, முளரி

விற்றல், கூறல், கொடை, பகர்தல், மாறல், விலை

விளைதநகர், கோலம்

விளுவனுக்கெதிர்மொழி, விடை

விளுவலும்விடையுங்கூடல், சல்லாபம்

விளுவல், கடாவல், வினவல்

விளுவெழுத்து, ஆ, எ, ஏ, ஓ, யா

## வீ

வீடு, அகம், அகாரம், இடம், இடவகை, இல், இல்லம், உறையுள், கிரகம், குலம், கேகம், சதனம், சரணம், சேர்பு, தாமம், நகர், நியாயம், நிகேதனம், நிசாதம், நிவேசனம், பதி, பவனம், பாத்தி, புக்கில், மந்திரம், மனை, மாடம், மாளிகை, வசதி, வயின், இவற்றுட்பார்ப்பார்வீடு, அகாரம்

வீட்டிறப்பு, இறவு, இறை, வளவி, தாழ்வாரத்தின்பெயர், ஆரோகணம, சோபானம

வீட்டின்மேலுலாவும்வெளி, அரமியம், நிலாமுற்றம்
வீட்டுத்திரம், தூலம், அன்றியுஞ்சுவர்ப்புறத்துநீண்டவுத்திரத்தின்பெயர், சுற்றுவாரி, தாழ், துடை, முகடு, விடங்கம்
வீட்டுமாசாரியன், கங்கைமைந்தன், காங்கேயன், சந்தனுமுன்மகன், தாலகேதனன், தெய்வவிரதன், பிரமசாரி, வன்னி, வீரன்
வீணைக்கருவி, கலம், கின்னரம், கோடவதி, கோட்டம், தண்டு, மாடகம், வல்லகி, விபஞ்சிகம், அன்றியுநிறைநரம்புள்ளது, பண், குறைநரம்புள்ளது, திறம், ஏழுநரம்புள்ளது, இன்னிசை
வீணைமுறுக்காணி, குப்பி, மாடகம்
வீணையினரம்பு, குரல், கோல், தந்திரி, நாடி, இவையெழுவகைப்படும், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்
வீணைவலிக்கட்டு, திவவு
வீணைவாசித்தல், கொழுந்துதல், தடவல், மீட்டுதல்
வீதி, செப்பம், ஞெள்ளல்
வீமன், இடும்பிகொழுநன், கதாயுதன், கீசகாரி, குந்திபுதல்வன், பகாசுரவயிரி, பாண்டுபுத்திரன், மடங்கற்கொடியோன், மாருதி, வாயுமைந்தன், விருகோதரன்
வீரபத்திரன், அழற்கண்வந்தோன், உக்கிரன், உமைமகன், ஐங்கரற்கிளையோன், குரோதன், சிங்கத்தோளுடையோன், சிம்புளானோன், சிறவிதிமகன்சிதைத்தோன், சுடர்விழியோன், செக்கர்வானிறத்தோன், தக்கன்மகஞ்சிதைத்தோன், பத்திரைகேள்வன், யானைமுகவற்கிளையோன், வெஞ்சிலைச்செல்வன்
வீரம், சாகசம், சூரம், சேவகம், சௌரியம், பராக்கிரமம், புறம், மறம், விறல், வீரியம் [க
வீரரின்பெயர், படைவீரரைக்காண்
வீழ்த்தல், இருத்தல், விழுத்தல்

# வெ

வெட்கம், இருளி, இலச்சை, உட்கல், உட்கு, சமழ்த்தல், சமழ்ப்பு, நாணம், நாண், மறத்தல், மானம், வட்கல், வெள்கல்
வெட்சி, குல்லை, சிந்தூரம், செச்சை, சேதாரம்
வெட்டல், இறத்தல், எருக்குதல், எறிதல், எற்றல், கடிதல், கண்டித்தல், காய்தல், சேதித்தல், தடிதல், தண்டித்தல், தறித்தல், துணித்தல், துண்டித்தல், துமித்தல், பகுத்திடல், பரிதல்
வெட்டிவேர், இருவேலி, பீதகம், மூலகந்தம், வேரி
வெட்பாலைமரம், கிரிமல்லிகை, குடசம்
வெண்கலம், உறை, கஞ்சம், தாரம்
வெண்காயம், காயம், அன்றியும், வெள்வெண்காயம், அரிட்டம், இலசுனம், ஈரவெண்காயத்தின்பெயர், சுகாந்தம், பலாண்டு
வெண்ணொச்சி, சிந்துவாரம், நீர்க்குண்டி
வெண்பா, முதற்பா, வெள்ளை, இதற்கிராகம், சங்கராபரணம்
வெண்மை, அரிணம், அரிச்சுனம், அவதாதம், கம், கவுரம், குருகு, குருத்து, சிதம், சுக்கிலம், சுசி, சுதை, சுப்பிரம், சுவேதம், தவளம், நரை, பாண்டரம், பாண்டுபாண்டுரம், பால், வால், விசதம், விளர், வெளிறு, வெள்ளி, வெள்ளை, அன்றியுஞ்சொஞ்சவெண்மையின்பெயர், தூசரம்
வெயில், ஆதபம், ஊழ், எல், என்றூழ், நளி, கோடை
வெளி, செண்டு, மன்றம், மன்று, வயல், வெடி, வெள்ளிடை
வெளிப்படல், மன்றுபடுதல்
வெள்ளம், ஓதம், நீத்தம், பிரளயம், பெருக்கு, வாரி, இதரேட்டம், கோலம்
வெள்வரி, உருவாரம்
வெள்ளாடு, காராடு, கொச்சை, பள்ளை, வற்காலி, வெள்ளை, இதன்குட்டி, வெள்ளை
வெள்ளாட்டுக்கடா, உதள், சகலகம், சாகப், செச்சை, மோத்தை
வெள்ளி, இரசிதப், எனனம், கனத

வுதம், தாரம், துருவண்ணம், வக்கம், வெண்டாது, வெண்பொன்

வெறியாட்டாளன், முருகன், வேலன்

வெறுப்பு, அபர்வு, அரதி, அவாவின்மை, உவட்டல், உவர்த்தல், உவர்ப்பு, ஒல்லாமை, காய்ப்பு கைத்து, துவ்வாமை, பிறழ்தல், பொருந்தாமை, மா, முனிவு, வீறு, வேண்டாமை

வெற்றி, அடல், ஆடு, ஆணை, குடுமி, கொற்றம், சயம், படினம், புகல் முல்லை, வலன், வாகை, விசயம், விதர்ப்பு, விறப்பு, விறல், வெற்றம், வென்றி

வெற்றிமாலை, வாகை

வெற்றிலை, தாம்பூலம், திரையல், தம்பை, மெல்லிலை

வெற்றிலைக்கொடி, இலைக்கொடி, தாம்பூலவல்லி, தாம்பூவி, நாகவல்லி

வெற்றிலைமூக்கரிகத்தி, குயிரி, குயிர்

## வே

வேகமுள்ளோன், கவனன்

வேங்கைமரம், கணி, நிமிசு, நிமில், பிரசாரம்

வேசி, கணிகை, குலை, பயனிலாள், பரத்தை, பொதுமகள், பொருட்பெண்டு, வரைவின்மாது, விலைமகள், வேசை

வேடர், ஆவியர், கானவர், கிராதர் குறவர், குன்றவர், கூளியர், கொலைஞர், சவரர், சிலவர், சில்லர், நியர், பாவமூர்த்திகள், புல்லர், புளிஞர், பொறையிலார், மறவர், மாகுலவர், முருடர், வனசரர், வியாதர்

வேடர்வீதி, பக்கணம், வாடை

வேட்டை, ஆகேடகம, பாபத்தி

வேண்டல், இரதி, கோர்தல்

வேதநூலுரைப்போன், அத்தியாபகன்

வேதநூற்பொருள், அருந்தபாகை, ஞானபாகை, கரும்பாகை, இதனுட்பம், உபநிடதம்

வேதமார்க்கம், வைதிகம், அம்மார்க்கத்தினடப்போர், வைதிகர்

வேதம், அத்தியாயம், அந்தணர்வாக்கு, ஆதிநூல், ஆரணம், எழுதாக்கிழவி, ஒத்து, சாகை, சுருதி, நிகமம், மறை, முன்னூல், இவை நான்காம், இவற்றுண்முதல்வேதம், இருக்கு, பவுடிகம், இரண்டாம்வேதம், தைத்திரியம், யச்சு, மூன்றும்வேதம், தேவேதம், கௌசிகம், சாமம், நான்காம்வேதம், அதர்வணம்

வேதனைசெய்வோன், அருந்துதன்

வேம்பு, நிம்பம், பிசிதம், பிசுமந்தம் மாலுகம்

வேர், சடை, சிவை, தூர், மூலம்

வேர்வை, கசிவு, சுவேதம், வியர்த்தல்

வேலமரம், உடை, குடை

வேலி, இலை, காவல்

வேல், அயில், அரணம், உடம்பிடி, எஃகம், குந்தம், சத்தி, ஞாங்கர், விட்டேறு, அன்றியுங்கைவேலின்பெயர், கப்பணம், சத்திரம், தோமரம்

வேவு, ஒற்று, வே

வேவுகாரர், ஒற்றர், சாரணர், சாரணர், வேயர், வேய்கள்

வேள்வியின்பெயர், யாகத்தைக்காண்க

வேறுபடுத்தல், விகற்பித்தல்

வேற்றுமை, அந்தரம், திரிபு, பங்கம், பின்னம், பேதம், மாற்றம், விகடம், விகற்பம், விகாரம், விசிர்தம், விபரீதம், விரூபம், விசேரதம், வில்லல், வீற்று, வேறுபாடு

## வை

வைகாசிமாதம், மாதவம், வைகாசம்

வையையாறு, வேகவதி

வைக்கோல், பலாலம், வழுது, வை,

வைசியர், அயனூருவில்வந்தோர், இப்பர், இனங்கோக்கள், எட்டியா தருமக்கிழவர், தாளாளர், மன்னர்பின்னர், முத்தொழிலோர், இவர்மூவகையர், கோவைசியர், தனவைசியர், பூவைசியர், அவர்துடையர், செட்டிகள், ஏருழவா, இவரைத்தத்தமவரிற்காண்க

வை எய வெள்

வைரீயம், வாலவாயசம்
வைத்தியர், அமாத்தியர், ஆயுள்வே
தியர், ஆரியர், பண்டிதர், பிடக
ர், மருத்துவர்
வெளவால், அஞ்சலிகை, ஆவாலம்,
துரிஞ்சில், வாவல்

முற்றிற்று

மூன்றாவது

# தொகையகராதி.

---

அருட்டொகைவகைவகுத்துலகனைத்துமங்கையிலேந்தியதலையிற்காத்- திருட்டொகைதுடைத்தெழும் பருதியைப் போலெங்கணும்விளக்கிய வோரொன்பான் — மருட்டொகைவிலக்கெனப்பணிந்தேத்தி வழக்கொடு புலமையோர்முன்னுரைத்த - பொருட்டொகைவகைப்படவிரித்துணர்த்திப்புகலுதற்றொகையகராதியென்றே.

அந்

## அ

அகிற்கூட்டு, ரு-சந்தனம், கர்ப்பூரம், எரிசக, தேன், ஏலம்

அக்கினி, ரு-இராகம், கோபம், காமம், சடம், தீபனம்

அங்கம், ச-தேர், கரி, பரி, காலாள் இவை சதுரங்கமெனப்படும்

அங்கம், ரு-திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் இவைபஞ்சாங்கமெனப்படும்

அங்கம், ய- மலை, யாறு, நாடு, ஊர், மாலை, பரி, கரி, முரசு, கொடி, செங்கோல், இவை அரசர்க்குரியதசாங்கம்

அங்கயோகம், அ-இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, இவற்றுள் இயமம்-கொல்லாமை, மெய்மைகூறல், கள்ளாமை பிறர்பொருளிச்சியாமை, இந்திரியமடக்கல்,) நியமம்-தவம், தூய்மை, தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல், தெய்வம்வழிபடல்,) இதனம்-சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம், அவையாவன சுவத்திகம், தொடைக்குமுழங்காற்குநடுவேயிரண்டுள்ளங்காலையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்தல்,)கோமுகம், சகனப்பக்கத்திலிருகாற்பரட்டையுமாறவைத்தவ்விருகாற் பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல்,)பதுமம், இருதொடைமேலு மிரண்டுள்ளங்காலையுமாறித்தோன்றவைத்தல்) வீரம், வலத்தொடையிலிடக்காற்பரட்டைச்சேர்த்தி யிறுமாப்புற்றிருத்தல்,) கேசரி, பீசத்தின்கீழ்ச்சீவனியிடத்துப்பரட்டைவைத்திடமுழங்கையைமுழந்தாளில்வைத்தங்குலிவிரித்து நாசியைப்பார்த்திருத்தல்,)பத்திரம், பீசத்தின்கீழ்ச்சீவனியிடத்திருகாற்பரட்டையும் வைத்தவ்விருபதத்தையுமிருகையாலிறுகப்பிடித் தசையாதிருத்தல்,) முத்தம், இடக்காற்பரட்டாற் சீவனியையமுத்தி வலக்காற்பரட்டைப்பரட்டின் கீழுந்தவிருத்தல்,) மயூரம், முழங்கையிரண்டுமுந்திப்புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக் காணிட்டித் தலைநிமி

ரீதிருத்தல்,) சுகம், சுகமுந்திட முமெவ்வாறிருக்கினெய் துமோவ வ்வாறிருத்தல்,) பிராணாயாமம்-பி ராணவாயுவை இரேசகபூரகரும் பகஞ்செய்தல்,) பிரத்தியாகா ரம்-உபாதிபைநீக்கிஉண்ணேக்க ல,) தாரணை-கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி, இவற்றி லொன்றிற் சந்ததம் சிந்தைவை த்தல்,) தியானம்- ஐம்புலமடக்கி ச்சிவயோகஞ்சேர்தல்,) சமாதி- இந்திரியமுதவிபதத்துவசேட்டை கட்கேதுவாயாக்கையுணின்றவத் றொடுகூடினுமவற்றிற் பற்றின்றி யிருக்குமான்மாவாகிய தன்னைத் தான் காண்டல்

அச்சுவினிதேவர்-உ

அரசச்சின்னம், உக-முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதின், தோரண ம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, க டல், மகரம், ஆமை, இணைக்கய ல், சிங்கம், தீபம், இடபம், ஆச னம்

அரசர், ௩-சேரன், சோழன், பா ண்டியன்

அரசர்க்குக்குழு, ரு- மந்திரியர், பு ரோகிதர், சேனுபதியர், தூதர், சாரணர்

அரசர்க்குத்துணைவர், அ-மந்திரியர், கருமாதிகாரர், சுற்றம், கடைகா பபாளர், நகரமாக்கள், படைத் தலைவர், இவுளிமறவர், யானைவீரர்

அரசர்க்குறதிச்சுற்றம், ரு- கட்பா ளர், அந்தணர், மடைத்தொழி லர், மருத்துவக்கலைஞர், நிமித்தி கப்புலவர்

அரசியல், சு-படை, குடி, கூழ், அ மைச்சு, நட்பு, அரண்

அரசியல், சு-அறநிலையறம், மறநி லையறம், அறநிலைப்பொருள், மற நிலைப்பொருள், அறநிலையின்பம், மறனிலையின்பம், அவையாவனத் த்தம வருணத்திற் பிறழாது நிலை பெறப் பாதுகாத்த லறநிலையற ம்,) நிரைமீட்டுப் பகைவென்று செஞ்சோற்றுக் கடன்கழியாதா ரைத்தண்டித்துக்குறைவுறச்செய் தன் மறநிலையறம்,) நெறிவழிநின் று தத்தநிலைபிறுன்முயன்று பெ றுபொருளறநிலைப்பொருள்,) ப கைஞர் பொருளுந் திறைப்பொ ருளுஞ் சூதில்வெல்பொருளுமறநி லைப்பொருள்,) பருவமுங் குலமு மொழுக்கமுங் குணமுமொத்த க ன்னிகையைத் திவேட்டில்லத்திரு த்தலறநிலையின்பம்,) ஏறுதழுவிபு ம் வில்லாவிலக்கமெய்து மிவ்வா றுமாறுடை நெறியின்மணத்தன் மறநிலையின்பம்

அரண், ச-மலை, காடு, மதில், கடல்

அலங்காரம், ௬௫-தன்மை, உவமை, உருவம், தீவகம், பின்வருநிலை, மு ன்னர்விலக்கு, வேற்றுப்பொருள் வைப்பு, வேற்றுமை, விபாவனை, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற் றம், ஏது, நுட்பம், இலேசம், நிர நிறை, ஆர்வமொழி, சுவை, தன மேம்பாட்டுரை, பரியாயம், சமா யுதம், உதாத்தம், அவநுதி, சி லேடை, விசேடம், ஒப்புமைக்கூ ட்டம், விரோதம், புகழ்நிலை, பு கழாப்புகழ்ச்சி, நிதரிசனம், புண ர்நிலை, பரிவருத்தனை, வாழ்த்து, சங்கீரணம், பாவிகம்

அவத்தை, ரு-சாக்கிரம், சொப்ப னம், சுழுத்தி, துரியம், துரியாதீ தம்

அளவு, ச-எண்ணல், எடுத்தல், முக த்தல், நீட்டல, தெறித்தலோடை க்கெனவுங் கூறுப

அளவை, அ-காட்சி, அநுமானம், ஆகமம், அருத்தாபத்தி, உவமா னம், அபாவம், சம்பவம், ஐதிக ம், அவையாவன, காணல்காட்சி) புகையைக்கண்டு நெருப்புண்டெ னலநுமானம்,) மரைபசுப்போ லெனஉவமானம்,) பெரியோர்வா ய்ச்சொலாகமம், பகலுண்ணுன் பருத்திருப்பானெனபுழியிரவிலொ ளித் துண்பானெனவுணர்தலருத் தாபத்தி) முன்னுமில்லைப் பின்னுமி ல்லை ஒருகாலத்து மில்லையெனல பாவம்,) இம்மரத்திற்பெயுளதெ ன்பதைதிகம்,) ஆயிரத்தினூறுண் டெனல் சம்பவம்

அறத்துறப்பு, ௮-ஐயப்படாமை, விருப்பின்மை,வெறுப்பின்மை,மயக்கமின்மை,பழிபைபேக்கல், அழுக்தோரைநிறுத்தல், அறம்விளக்கல், பேரன்புடைமை

அறம், ௨-இல்லறம், துறவறம்

அறம், ௧௨-ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமையத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணஞ்சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்குணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்துயிர்காத்தல், கன்னிகாதானம்

அனுபந்தம், ௪-விடயம், சம்பந்தம், பிரயோசனம், அதிகாரி

அன்னுவயவிலக்கணம், ௫-விசேடணம், விசேடியம், கருத்தா, கருமம், கிரியை

## ஆ

ஆச்சிரமம், ௪-பிரமசாரி, இல்வாழ்வோன், வானப்பிரத்தன், சன்னியாசி, இவருட்பிரமசாரி, ஆசிரியனிடத்தோதி விரதங்காத்துவிவாகமின்றியிருப்பான்,) இல்வாழ்வோனில்லறத்தின்வாழா இல்லாளோடுங் கூடிவாழ்வோன்,)வானப்பிரத்தன், இல்லந்துறந் தில்லாளோடாயினுந் தனித்தாயினும்வனத்திற்றவஞ்செய்வோன்,) சந்நியாசி, முற்றத்துறந்தோன்

ஆதாரம், ௬-மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, இவற்றிற்குமுறைமையேயிடம், குதம், குய்யம், நாபி, இதயம், அடிநா, நெற்றி

ஆயுதவகை, ௨-அத்திரம், சத்திரம் இவற்றுட் கைவிடுமாயுதமத்திரம், கைவிடாவாயுதஞ் சத்திரம்

ஆன்மா, ௨-சீவான்மா, பரமான்மா, அவையாவன சரீராவச்சின்னவான்மா-சீவான்மா, இதரபதார்த்தானவச் சின்னவான்மா-பரமான்மா

## இ

இசை, ௩-மந்தரம், மத்திமம், தாரம்

இசை, ௭-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம், இவற்றன்மிடற்றுக்குரல், நாவினுத்துத்தம், அண்ணத்தாற்கைக்கிளை, சிரத்தாலுழை, நெற்றியாலிளி, நெஞ்சால்விளரி, மூக்காற்றாரம், இங்ஙனந்தனித்தனிப்பிறக்கும், இவையே யேழ்சுரமெனவும் வீணையிலேழ்நரம்பெனவும்படும், இவற்றிற்கோசையுவமை, மயில், இடபம், ஆடு, கொக்கு, குயில், குதிரை, யானை,) சுவையுவமை, பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி,) வாசனையுவமை, மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், பொன்னுவிரை, புன்னை,) அக்கரம், ஆஅ ஈஇ ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ,) மாத்திரை, நான்குகுரல், நான்கு துத்தம், இரண்டு கைக்கிளை, மூன்றுழை, நான்கிளி, மூன்றுவிளரி, இரண்டுதாரம்,) இவற்றுலெழுபாலைபிறக்கும், அவையாவன, குரலேகுரலாயிற்செம்பாலை,) துத்தமே குரலாயிற்படுமலைப்பாலை,) கைக்கிளையேகுரலாயிற் செவ்வழிப்பாலை,) உழையேகுரலாயினருப்பாலை,) இளியேகுரலாயிற்கோடிப்பாலை,) விளரியேகுரலாயின் விளரிப்பாலை,) தாரமேகுரலாயின்மேற்செம்பாலை,) இவற்றுட் செம்பாலைக்குக் கோடிப்பாலைவலிது, கோடிப்பாலைக்கு விளரிப்பாலையுமேற்செம்பாலையும்வலிது, அன்றியுந்தாரத்துழையுமுழையுட்குரலுங்குரலுளிளியுமிளியுட்டுத்தமுந் துத்தத்துள் விளரியும்விள

ரியுட்கைக்கிளையும் பிறப்பது தரு தி,) இவற்றிற்கிறைவர், விசுவாமித்திரன், சமதக்கினி, சந்திரன், சூரியன், கௌதமன், காசிபன், இசன், இவற்றிற்குயிர் நசன்

இடம், ௩-தன்மை, முன்னிலை, படர்க்கை

இதிகாசம், ௨-பாரதம், இராமாயணம்

இரதம், ௯-சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம்

இராகத்தகுதி, ௪-இடம், செய்யுள், குணம், காலம், இவற்றனிடம்பற்றியவிராக மைந்திணைவிராகம்,) செய்யுட்பற்றியவிராகத்துள், வெண்பாவிராகஞ் சங்கராபரணம், அகவவிராகந் தோடி, கலிவிராகம் பந்தவராளி, கலித்துறைவிராகம்பயிரவி, தாழிசைவிராகந்தோடி, விருத்தவிராகங்கலியாணி, காம்போதி, மத்தியமாவதிபலவும், உலா விராகஞ் சௌராட்டிரம், தோடையவிராகஞ் சௌராட்டிரம், நாட்டை, மங்களராகம்மங்கலகௌசிகம், தேவாரத்திராகம், பூபாளம், பிள்ளைக்கவிராகங் கேதாரகவுளம், பரணிராகங்கண்டாரவம்.) குணம்பற்றியவிராகத்துள் இரக்கராகம், ஆகரி, கண்டாரவம், நீலாம்பரி, பியாகடம், புன்னாகவராளி, துக்கவிராகம், இரக்கராகங்களன்றி வராளியின்மேலாம், மகிழ்ச்சிவிராகம், காம்போதி, சாவேரி, தன்னியாசி, யுத்தவிராகம், நாட்டை,) காலம்பற்றியவிராகத்துள், வசந்தகாலவிராகம், காம்போதி, அசாவேரி, தன்னியாசி, அன்றியுமாலைவிராகங்கலியாணி, காபி, கன்னடம், காம்போதி, யாமராகம், ஆகரி, விடியவிராகம், இந்தோளம், இராமகலி, தேசாட்சரி, நாட்டை, பூபாளம், உச்சிவிராகம், சாரங்கம், தேசாட்சரி, அன்றியும், ஆகரி இந்தோளம், இராமகலி, சாரங்கம், பூபாளநீக்கிநின்றமற்றவையெக்காலத்தும்பொதுமைய

இராகம், ௬௨-பயிரவி, தேவக்கிரியை மேகவிரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, சிராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, தேசி, இலலிதை, தோடி, வசந்தம், இராமக்கிரியை, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, பங்காளம், தன்னியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம், இவற்றுள், பைரவி, புருடவிராகம், பிராமணசாதி, இதின் மனைவிகள். தேவக்கிரியை, மேகவிரஞ்சி, குறிஞ்சி, அதிதேவதையீசன்,) பூபாளம், புருடவிராகம், பிராமணசாதி, இதின்மனைவிகள், வேளாவளி, மலகரி, பௌளி, அதிதேவதை திருமால்,) சிராகம், புருடவிராகம், அரசசாதி, இதின் மனைவிகள் இந்தோளம், பல்லதி, சாவேரி, அதிதேவதை, சரச்சுவதி,) படமஞ்சரி, புருடவிராகம், அரசசாதி, இதின்மனைவிகள், தேசி, இலலிதை தோடி, அதிதேவதை, இலக்குமி) வசந்தம், புருடவிராகம், வைசியசாதி, இதின்மனைவிகள், இராமக்கிரியை, வராளி, கைசிகம், அதிதேவதை, சூரியன்,) மாளவி, புருடவிராகம், வைசியசாதி, இதின்மனைவிகள், நாராயணி, குண்டக்கிரியை, கூர்ச்சரி, அதிதேவதை, நாரதன்,) பங்காளம், புருடவிராகம், சூத்திரசாதி, இதின்மனைவிகள், தன்னியாசி, காம்போதி, கௌளி, அதிதேவதை, விநாயகன்,) நாட்டை, புருடவிராகம், சூத்திரசாதி, இதின்மனைவிகள் தேசாட்சரி, காந்தாரி, சாரங்கம், அதிதேவதை தும்புருவன்,) இவையன்றிப் பலவகைப்பட வழங்குமிராகம்பலவுளவைகூறிற்பெருகும்

இராசி, ௧௨-மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம். இவற்றுண் முன்னாறுமுத்தராயனராசி, பின்னாறுந் தக்கணாயனராசி, அன்

ரிபு முதன்மூன்றங் கடைமூன்ற மேறுமிராசி, இடையாறுமிறக்கு மிராசி

இருமை, உ-இம்மை, மறுமை

இலக்கணம், ரு-எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி

இலிங்கம், ரு-பிருதிவிலிங்கங் காஞ்சியில், அப்புலிங்கம் திருவானைக்காவில், தேயுலிங்கந் திருவண்ணாமலையில், வாயுலிங்கஞ் சீகாளத்தியில், ஆகாயலிங்கஞ் சிதம்பரத்தில்,

இவையே பஞ்சபூத வடிவங்களான பிரதான பஞ்சலிங்கம்

இழிச்சொல், ச-குறளை, பொய், கடுஞ்சொல், பயனிலசொல்

## ஈ

ஈச்சுரன்குணம், அ- தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவேபாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை, அன்றியும், வரம்பின்ஞானம், வரம்பில்காட்சி, வரம்பிலின்பம், வரம்பிலாற்றல், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, இடையூறின்மை என்பனவுமாம்

ஈச்சுரன் பிரபுத்துவ சாமர்த்தியகுணம், ங-கர்த்தத்துவம், அகர்த்தத்துவம், அன்னியதாகர்த்தத்துவம்

ஈச்சுரன்முகம், ரு-ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம், இவற்றுள், ஈசானமனைத்துமாதல், தற்புருடன் காத்தல், அகோரமழித்தல், வாமம்விளக்கல், சத்தியோசாதந்தோற்றுவித்தல்

ஈச்சுரன்முக்கியகுணம், கூ-சருவஞ்ஞத்துவம், சருவேச்சுரத்துவம், சருவநியந்திருத்துவம். சருவாந்தரியாமித்துவம், சருவகற்பிதத்துவம், சருவசத்தித்துவம், அன்றியும் தன்வயத்தனாதல், முதலிலனாதல், உடம்பிலனாதல், எல்லாந லமுளனாதல், எங்கும் வியாபகனாதல், எவற்றிற்குங்காரணனாதல்

## உ

உட்பகை, சு-காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்

உண்டி, ச-உண்டல், தின்றல், நக்கல், பருகல், அவையாவன, சோறுமுதலியவுண்டல், கறிமுதலியதின்றல், தேன்முதலியநக்கல், நீர்முதலிய பருகல்

உபசாரம், யசு-தவிசளித்தல், கைகழுநீர்தரல், கால்கழுநீர்தரல், மூக்குடிநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூறரல், சேய்வைபூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசிதூவல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைகாய்தரல், மந்திரமலரானருச்சித்தல்

உபநிடதம், ஙஉ-சிருத்திரம், பிரகதாரண்ணியம், சுவேதாசுவதரம், கைவல்லியம், காலாக்கினி, கடம், வல்லி, காத்தியாயனம், பிரமம், நாராயணம், அங்கிசம், பரமாங்கிசம், பாற்கரம், பிரமபிந்து, ஆருணி, அமிர்தபிந்து, பஞ்சபஞ்சம், பிரமசாபாலம், தேசோபிந்து, வார்சியாநீயம், போதாயநீயம், ஆசுவலாயநீயம், சாங்கியாயநீயம், வாசிராயநீயம், சௌனகீயம், சிவசங்கற்பம், சிரவணம், பாரகம், சிம்புரோடியம், மாண்டூகம், முண்டிரம், மௌண்டிரம்

உபாயம், ச-சாமம், தானம், பேதம், தண்டம், அவையாவன, சமாதானத்தோடாயினும் பொருள்கொடுத்தாயினும் பிறரைப்பிரித்தாயினும் படைகொண்டாயினுங் காரியங்கொள்ளலிக்காங்கு மரசர்க்குரியனவாம்

உயிர்வேதனை, யஉ-அனல், சீதம், அசனி, புனல், வாதம், ஆயுதம், விடம், மருந்து, பசி, தாகம், பிணி, முனிவருமை

உருத்திரா, யக-மாதேவன், அரன்,

உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன்

உரை, ச-கருத்துரை, பதவுரை, பொழிப்புரை, அகலவுரை, அவையாவன, செய்யுட்கருத்துரைத்தலே கருத்துரை, சொற்றோறும்பதப்பொருளுரைத்தலே பதவுரை, பொருட்டொகுத் துரைத்தலே பொழிப்புரை, இலக்கணமுமிலக்கியமுமெடுத்துக்காட்டிப்பொருள்விரித்துரைத்தலே அகலவுரை

உரையிலக்கணம், ரு-பதம், பதப்பொருள், வாக்கியம், வினா, விடை

உலகம், ங-பூமி, அந்தரம், சுவர்க்கம், அன்றியும் பூலோகம், பரலோகம், பாதாளலோகமென்பாருமுளர்

உலகம், யச-மேலுலகேழுங் கீழுலகேழும் மேலுலகாவன, பூலோகம், புவலோகம், சுவலோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம்,) கீழுலகாவன, அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளம்

உலோகம், ரு-பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், இவையே பஞ்சலோகம்

உலோகம், எ-செம்பொன், வெண்பொன், கரும்பொன், செம்பு, ஈயம், வெண்கலம், தரா

உவர்ப்பு, கூ-ஆசியம், இரதி, அரதி, சோகம், பயம், குற்சை, இவை முறையே, சிரிப்பு, ஆசை, வெறுப்பு, சோர்வு, அச்சம், அருவருப்பு

## ஊ

ஊறு, அ-வெம்மை, தண்மை, மென்மை, வன்மை, திண்மை, நொய்மை, சீர்மை, சற்சரை, இவையே தொடப்படுபொருட்கெண் குணம்

ஊறுபாடு, ச-எறிதல், குத்தல், வெட்டல், எய்தல்

## எ

எச்சம், உ-பெயரெச்சம், வினையெச்சம்

எச்சம், அ-குறள், கூன், ஊமை, செவிடு, குருடு, முடன், உறுப்பு மயக்கம், உறுப்பில் பிண்டம், இவை யெண்வகையுடற்குறை

எழுத்துத்தானம், ரு-பாலன், குமரன், அரசன், விருத்தன், மரணம், இவற்றிற்கு முறையே, அ ஆ, இ ஈ ஐ, உ ஊ ஔ, எ ஏ, ஒ ஓ, பாட்டுடைத்தலைவன், பேரெழுத்தைப் பாலதானமாகக்கொண்டெண்ணப்படும், இவற்றன் முன்னையமூன்றுநன்மைபயக்கும், பின்னையவிரண்டுந் தீமை பயக்கும்

## ஐ

ஐச்சுவரியம், அ-இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை

ஐம்புலநுகர்ச்சியிலிறப்பன, ரு-சுவையாலிறப்பது மீன், நாற்றத்தால்வண்டு, பரிசத்தால் யானை, ஓசையால் அசுணம், ஒளியால் விட்டில்

## ஒ

ஒருமை, க-இறையுணர்வு

## க

கடல், எ-உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன்

கடுகம், ங-சுக்கு, திப்பிலி, மிளகு, இவையே திரிகடுகெனப்படும்

கடைப்படுதானம், எ-ஆர்வம், புகழ், அச்சம், கைம்மாறு, காரணம், கண்ணோட்டம், கடைப்பாடு

கணக்குவகை, ச-தொகை, பிரிவு, பெருக்கு, கழிவு

கணம், அ-நிலம், நீர், மதி, இயமானன், சூரியன், தீ, வாயு, ஆகாயம், இவற்றுள் முன்னை நான்கு நன்று, பின்னர் நான்குங் கலகம், நிரை நிரைநிரை நிலக்கணம், நேர் நிரைநிரை நீர்க்கணம், நிரைநேர்நேர் மதிக்கணம், நேர்நேர

நேர் உயிர்க்கணம், நேர் நிரை
நேர் சூரியகணம், நிரைநேர்நிரை
நிய்க்கணம், நேர்நேர்நிரை வாயு
க்கணம், நிரைநிரைநேர் ஆகாய
க்கணம்

கணம், ௰௮-அமரர், சித்தர், அசுரர்,
தைத்தியர், கருடர், கின்னரர், நி
ருதர், கிம்புருடர், காந்தருவர், இ
யக்கர், விஞ்சையர், பூதர், பைசா
சரர், அந்தரர், முனிவர், உரகர்,
ஆகாயவாசிகள், போகபூமியர்

கணிதம், ௮-சங்கிவிதம், விபகவித
ம், குணனம், பாகாரம், வர்க்கம்,
வர்க்கமூலம், கனம், கனமூலம்,
இவற்றுள், சங்கிவிதம், கூட்டல்)
விபகவிதம், கழித்தல்,) குணனம்
பெருக்கல்,) பாகாரம், பங்கிட
ல்,) வர்க்கம், சமமாகியவிரெண்
ணின் பெருக்கம், அஃதாவது, நி
லத்தைச் சமமாக நாற்கோணஞ்
செய்தல்,) வர்க்கமூலம், அவ்வர்க்
கத்தொகையின்றதன்மூலமா
கியவரம்பறிதல்,) கனம், சமமா
கியமூவெண்ணின்பெருக்கம், அஃ
தாவது, குழியைச்சமமாகப்பன்
னிருகோணப்படுத்தல்) கனமூல
ம், அக்கனத்தொகையினின்றத
ன் மூலமாகியவொரு மூலையறிதல்

கண்டம், ௯-கீழ்விதேகம், மேல்வி
தேகம், வடவிதேகம், தென்வி
தேகம், வடவிரேபதம், தென்வி
ரேபதம், வடபரதம், தென்பரத
ம், மத்திமகண்டம், இவையே ந
வகண்டம்

கதி, ௪-தேவகதி, மக்கட்கதி, விலங்
கின்கதி, நரககதி

கந்தம், ௨-நற்கந்தம், துர்க்கந்தம்

கரணம், ௪-மனம், புத்தி, அகங்கா
ரம், சித்தம்

கரணம், ௰௧-பவ, பாலவ, கவுலவ,
தைதுலை, கரசை, வனசை, பத்தி
ரவா, சகுனி, சதுர்ப்பாத, நாக
வா, கிமிந்துக்கின

கருமபூமிக்குரிமை, ௬-வரைவு, தொ
ழில், வித்தை, வாணிகம், உழவு, சி
ற்பம்

கருமேந்திரியம், ௫-வாக்கு, பாதம்,
பாணி, பாயுரு, உபத்தம்

கருவுளமைப்பு, ௬-பேறு, இளமை,
இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு

கலைஞானம், ௬௪-அக்கரவிலக்கண
ம், இலிகிதம், கணிதம், வேதம், பு
ராணம், வியாகரணம், நீதிசாத்
திரம், சோதிடசாத்திரம், தரும
சாத்திரம், யோகசாத்திரம், மந்
திரசாத்திரம், சகுனசாத்திரம், சி
ற்பசாத்திரம், வைத்தியசாத்திர
ம், உருவசாத்திரம், இதிகாசம்,
காவியம், அலங்காரம், மதுரபா
டணம், நாடகம், நிருத்தம், சத்த
ப்பிரமம், வீணை, வேணு, மிருதங்
கம், தாளம், அத்திரபரிட்சை, க
னகபரிட்சை, இரதபரிட்சை, க
சபரிட்சை, அசுவபரிட்சை, இர
த்தினபரிட்சை, பூமிபரிட்சை, ச
ங்கிராமவிலக்கணம், மல்லயுத்தம்,
ஆகருடணம், உச்சாடனம், வித்
துவேடணம், மதனசாத்திரம், மோ
கனம், வசீகரணம், இரசவாதம்,
காந்தருவவாதம், பைபீலவாதம்,
கவுத்துகவாதம், தாதுவாதம், கா
ருடம், நட்டம், முட்டி, ஆகாய
ப்பிரவேசம், ஆகாயகமனம், பர
காயப்பிரவேசம், அதிரிசயம், இ
ந்திரசாலம், மகேந்திரசாலம், அ
க்கினித்தம்பம், சலத்தம்பம், வா
யுத்தம்பம், திட்டித்தம்பம், வா
க்குத்தம்பம், சுக்கிலத்தம்பம், க
னத்தம்பம், கட்கத்தம்பம், அ
வத்தைப்பிரயோகம்

கவி, ௪-ஆசு, மதுரம், சித்திரம்,
வித்தாரம், இவற்றுள், பொருள
டிபாவணிமுதலிய கொடுத்துமற்
றொருவன் பாடுகவென்றவுடனே
பாடுவோனாசுகவி,) பொருட்செல்
வம், சொற்செல்வம், தொடை,
தொடைவிகற்பஞ்செறியவுருவக
முதலியவலங்காரத்தேரிடின்னோ
சைத்தாயமுதமூறப் பாடுவோன
மதுரகவி,) மாலைமாற்று, சுழிகு
ளம், ஏகபாதம், சக்கரம், எழுகூ
ற்றிருக்கை, காதைகரப்பு, கரந்
துறை, நாசங்கொனல், வாவன்
ஞாற்று, பாதமயக்கு, பாவின்பு
ணர்ப்பு, கூட்சதுக்கம், கோமூ
த்திரி, ஓரெழுத்தினம், ஒற்றெழு

த்துத்திர்ந்த வொருபொருட்பா
டு, சித்திரப்பா, விசித்திரப்பா,
விஞவுத்தரம், சருப்பதோபத்தி
ரம், எழுத்துவருத்தனமிவைமுத
லிய,மிறைக்கவிதெரிந்துபாடுவோ
ன், சித்திரகவி,) மும்மணிக்கோ
வை,பன்மணிமாலை,) மறம், கவி
வெண்பா, தசாங்கம், மடலூர்த
ல், கிரீடை, இயல், இசை, கூத்
து, பாசண்டத்துறை, இவைமுத
லியவிரித்துப்பாடுவோன் வித்தா
ரகவி

கன்னிகை, ரு-அகலிகை, துரோப
தை, சீதை, தாரை, மண்டோதரி

## கா

காதலர், ங-புருடன், தோழன், மகன்

காலம், ங-இறந்தகாலம், நிகழ்கா
லம், எதிர்காலம்

காலம், சு-பருவத்தைக் காண்க

## கி

கிரகம், கூ-ஆதித்தன், சோமன், அ
ங்காரகன், புதன், பிரகற்பதி, சு
க்கிரன், சனி, இராகு, கேது, இ
வையே நவக்கிரகங்களென்னப்ப
டும்

## கு

குணம், ங-சாத்துவிகம், இராசதம்,
தாமதம், அவையாவன, ஞானம்,
அருள், தவம், பொறை, வாய்மை,
மேன்மை, மோனம், ஐம்பொறி
யடக்கலெனவெட்டுஞ்சாத்துவிக
ம்,) மனவூக்கம், ஞானம், வீரம்,
தவம், தருமம், தானம், கல்வி, கே
ள்விடெனவெட்டுமிராசதம்,) பே
ருண்டி, நெடுந்துயில், சோம
்பு, நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம்,
மறதி, பொய், கோபம், காமம்,
கொலை, இவைதாமதம்

குணம், ச-ஆடூஉக்குணம், அறிவு, நி
றை, ஓர்ப்பு, கடைப்பிடி,) மகடூ
உக்குணம், நாணம், மடம், அச்சம்,
பயிர்ப்பு

குரவர், ரு-அரசன், உபாத்தியாய
ன், தந்தை, தேசிகன், மூத்தோன்

குற்றம், ங-காமம், வெகுளி, மயக்கம்

குற்றம், ரு-கொட்டாவி, நெட்டை,
குறுகுறுப்பு, கூன்கிடை, நட்டுவி
ழல்

குற்றம், அ-ஞானாவரணியம், தரிச
னாவரணியம், வேதநீயம், மோக
நீயம், ஆயு, நாமம், கோத்திரம், அ
ந்தராயம்

## கூ

கூத்துவகை, உ-தேசிகம், மார்க்கம்

## கே

கேள்வி, ச-அறம், பொருள், இன்
பம், வீடு, இன்னுன்குங்கேட்டல்

கேள்வி, ரு-அறம், பொருள், இன்
பம், வீடு, நூக்காற்கேள்வியோடி
வற்றின்வழிநிற்றல்

## கை

கைத்தொழில், ரு-எண்ணல், எழுத
ல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல்,
யாழ்வாசித்தல்

## கோ

கோசம், ரு-அன்னமயம், பிராணம
யம், மனோமயம், விஞ்ஞானமயம்,
ஆனந்தமயம், அவையாவன, உட
ல் அன்னமயகோசம், கருமேந்தி
ரியமும்பிராணனும்பிராணமயகோ
சம், கருமேந்திரியமுமனமுமனோ
மயகோசம், ஞானேந்திரியமும் பு
த்தியும் விஞ்ஞானமயகோசம், அ
வித்தையானந்தமயகோசம்

## கௌ

கௌடம், ரு-சுத்தகௌடம், கான
குப்சம், சாரசுவதம், உற்கலம்,
மைதுலை

கௌவியம், ரு-கோசலம், கோமய
ம், பால், தயிர், நெய்

## ச

சக்கரவர்த்திகள், சு-அரிச்சந்திரன்,
நளன், முசுகுந்தன், புருகுற்சன்,
புரூரவன், கார்த்தவீரியன், இவர்
கண் மற்றொருவனைப்பணியாது த
ரணியாண்டோர்

சதுரங்கம், அங்கங்காண்க

சத்தம், ௫-நாதக்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி, இவையேசத்தத்துக்கேதுகாரணம்

சத்தி, ௩-இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, இவற்றுளிச்சாசத்தியுயிர்க்கருணேசம், ஞானசத்தி, கருமங்களையறிந்தூட்டல், கிரியாசத்தி, உலகங்களாக்கல்

சத்தி, ௫-சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, அவையாவன, உயிர்க்கொளியாகநிற்பதுசிற்சத்தி,) பிராணன்முதலியவாயுவாக நிற்பது பராசத்தி,) பஞ்சபூதமாகநிற்பதிச்சாசத்தி,) ஐம்பொறியுணர்ச்சியாகநிற்பதுஞானசத்தி, மற்றுமறவினைத்துணையாகநிற்பது கிரியாசத்தி

சமயம், ௬-வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம், அன்றியும்புறச்சமயமாவன, ௬, உலகாயிதம், புத்தம், சமணம், மீமாஞ்சை, பாஞ்சராத்திரம் பாட்டாசாரியம்

சயனம், ௫-இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி, இவற்றாற்செய்யப்பட்டவைவகைமெத்தை, இவையேபஞ்சசயனம்

## சா

சாதி, ௪-ஆந்திரம், கன்னடம், திராவிடம், மகராட்டிரம்

சாத்திரம், ௩-சாங்கியம், பதஞ்சலியம், வேதாந்தம், இவைமுறையேகபிலர், பதஞ்சலி, வியாசர் இம்மூவராற் கூறப்பட்டன, இவற்றையத்தியான்மிகநூலென்ப

சாத்திரம, ௬-வேதாந்தம், வைசேடிகம, பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தரமீமாஞ்சை

சாந்துவகை, ௪-பீதம், கலவை, வட்டிகை, புவி

## சி

சித்தர், ௯- சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், மச்சேந்திரநாதர், கடேந்திரநாதர், கோரக்கநாதர்

சித்தி, ௮-அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம், அவையாவன, ஆன்மாப்போலாதலணிமா,) மகத்துவமாதலேமகிமா,) தன்னுடற்கண்டிப்பின்றுய்க்கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லவனாதல் கரிமா,) இலகுத்துவமாதலேயிலகிமா, வேண்டுவனவடைதலே பிராத்தி,) நிறையுளனாதலேபிராகாமியம்,) ஆட்சியுளனாதலேயீசத்துவம்,) எல்லாந்தன்வசமாக்கவல்லனாதலேவசித்துவம்

சிரஞ்சீவியர், ௭-அசுவத்தாமன், மாவலி, வியாசன், அநுமான், விபீடணன், கிருபாசாரியன், பரசிராமன்

சிவதத்துவம், ௫ சுத்தவித்தை, ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம், அவையாவன, ஞானமேறிக் கிரியைகுறைந்தது, சுத்தவித்தை,) ஞானங்குன்றிக்கிரியையுயர்ந்ததீச்சுரம், ஞானங் கிரியையொத்ததுசாதாக்கியம்,) கிரியைநாடல்சத்தி,) ஞானமொன்றல சிவம்)

சிவபூசையியல்பு, ௪-சரிதை, கிரியை, யோகம், ஞானம்

சிவாகமம், ௨௰௮-காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம, அஞ்சுமான், சுப்பிரபேதகம், விசயம், நிசுவாசம், சுவாயம்புவம், அனலம், வீரம, இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத்தம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுளம

சிற்பத்தொழிற்குரிய, ௰- கல், உலோகம், செங்கல், மரம், மண், சுதை, தந்தம், வண்ணம, கண்டசருக்கரை, மெழுகு

சிற்பநூல், ௩௰௨-விச்சுவதருமம், விச்சுவேசம், விச்சுவசாரம், விருத்தம், தாவட்டம், நளம், மயம், அ

ஞமான, பானு, கற்பாரியம், சிருட்டம், மாஞ்சாரம், வத்துவித்தியாபதி, பாரசரியம், அருடிகம், சபித்தகம், வாத்துபோதம், வித்தாரம், இந்திரம், வச்சிரம், சவுமம், விச்சுவகாசிபம், மகதந்திரம், விசாலம், சித்திரம், காபிலகாலபூபம், காமசங்கிதை, சாத்திகம், விச்சுவபோதம், ஆதிசாரம், வெகுச்சுருதம், மானபேதம்

## சீ

சீவதேகம், ௩-சூலம், சூக்குமம், காரணம் .

சீவராவத்தை, ௩-சாக்கரம், சொப்பனம், சுழுத்தி

## சு

சுடர், ௨-சூரியன், சந்திரன்

சுடர், ௩-சந்திரன், சூரியன், அக்கினி

சுபம், அ-மங்கலங்காண்க

சுப்பிரமணியர்பிரதானத்தலம், ௬-திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுகள், சோலைமலை

சுரம், எ-ச, ரி, க, ம, ப, த, நி, அன்றியுமேழிசைகாண்க

சுவை, ௬-கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு,

## சூ

சூதகம், ௫-சனனசூசம், மரணசூசம், சண்டாளநீரிற்றோய்தல், சுராபானம்பண்ணல், பொய்கூறல்

சூரியர், ௰௨- தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்திரு, துவட்டன், இப்பெயர் சித்திரைமாதமேடவிராசிமுத லொவ்வொருமாதத் தொவ்வொரிராசியிற்புகுந்து சூரியனுக்குமுறையே செல்லுமென்பர், இவரேதுவாதசாதித்தர்

சூரியர்சந்திரர்முதலியவீதி, ௩-மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி, அவைதாம், இடபம், சிங்கம், மிதுனம், கடகம், நான்குமேடவீதி) மீனம், மேடம், கன்னி, துலாம், நான்குமிடபவீதி) தனுசு, மகரம், கும்பம், விருச்சிகம், நான்கு மிதுனவீதி

## சே

சேனைத்தொகை, ௰-பதாதி, சேனுமுகம், குமுதம், கணகம், வாகினி, பிரளயம், சமுத்திரம், சங்கம், அநிகம், அக்கோணி, அவையாவன, யானை, க, தேர், க, குதிரை, ௩, காலான், ரு, இவைகூடியதுபதாதி, பாதாதிமும்மடிகொண்டது, சேனுமுகம், சேனுமுகம்மும்மடிகுமுதம், குமுதமும்மடிகணம், கணமும்மடிவாகினி, வாகினிமும்மடிபிரளயம், பிரளயமும்மடிசமுத்திரம், சமுத்திரமும்மடிசங்கம், சங்கமும்மடியநிகம், அநிகமும்மடி அக்கோணி

## சை

சைவம், ௰௬-ஊர்த்தசைவம், அநாதிசைவம், ஆதிசைவம், மகாசைவம், பேதசைவம், அபேதசைவம், அந்தரசைவம், குணசைவம், நிற்குணசைவம், அத்துவாசைவம், யோகசைவம, ஞானசைவம், அணுச்சைவம், கிரியாசைவம், நாலுபாதச்சைவம், சுத்தசைவம்

## சொ

சொல், ச-பெயர், வினை, இடை, உரி

## த

தத்துவம், ௯௬-ஆன்மதத்துவம், உ௪, நாடி, ௰, அவத்தை, ௫, மலம், ௩, குணம், ௩, மண்டலம், ௩, பிணி, ௩, விகாரம், அ, ஆதாரம், ௬, தாது, எ, வாயு, ௰, கோசம், ௫, வாயில், ௯, இவற்றுளான்மதத்துவமாவன, பூதம், ரு, புலன், ௫, ஞானேந்திரியம், ரு, கருமேந்திரியம்

ழ, கரணம், ச, இவைதத்தமவரி
பிற்காண்க

தந்தையர், ரு-பிறப்பித்தோன், கற்
பித்தோன், மணமுடிப்பித்தோன்
அன்னந்தந்தோன், ஆபத்துக்குத
விநோன்

தமிழ், ௩-இயற்றமிழ், இசைத்தமி
ழ், நாடகத்தமிழ்

தமிழ்நாடு, ௰௩-செந்தமிழ்நாடொ
ன்று, இதற்கெல்லை, கருவூரின்கி
ழக்குமருவூரின்மேற்கு, வைகை
யாற்றின்றெற்குமருதயாற்றின்வ
டக்கு, இதனைச் சூழ்ந்த கொடு
ந்தமிழ் நாடு, ௰௨, தென்பாண்
டி, குட்டம், குடம், கற்கா, வே
ண், பூழி, பன்றி, அருவா, அ
ருவாவடதலை, சீதம், மலாடு, பு
னநாடு

தயாவிருத்தி, ௰௪-களாபடனம், வி
யாதாகாரம், கிற்கததண்டனம்,
சந்தேகவாரணம், அவ்வியகுண
சகனம், பரதிருதான்யோகம், ப
ராத்ததேவப்பிரார்த்திதம், அவை
யாவனமுறையே, கல்விபயிற்றல்,
துயர்தீர்த்தல், தண்டத்தினீக்கல்,
ஐயந்தேற்றல், பிறர்குணத்தழுக்
காறின்றிப்பொறுத்தல், பிறராற்
செய்யப்படுதீமைமறந்துஎன்றிகி
னைத்தல், பிறர்க்குவேண்டித் தெ
ய்வம்வழிப்படல், இவையுயிர்க்கே
முபகாரம், அன்றியுஞ் சத்தாங்
கோபகாரம், அன்னம், பானம்,
அம்பரம், மந்திரம், தாகபாலன
ம், காராமயத்திரிதயமோசனம்,
சவச்சேமம், அவையே, உணவு,
பானம், உடை, இடம், அடிமை
காத்தல், சிறைநோய்மூன்றுந்தீ
ர்த்தல், பிணமடக்கல், இவையுட
ற்கேழுபகாரம்

தயாவிருத்தி, அ-பிறர்க்குப்பொரு
ள்வரவையுவத்தல், பிறர்செல்வம்
பொறுத்தல், பிறர்கருமத்திற்கு
டன்படல், தீமைக்கஞ்சல், பிறர்
கருமமுடிக்கவிரைதல், பிறரைய
ந்தீர்த்தல், கன்மைகடைப்பிடித்
தல், பிறர்துயர்க்கிரங்கல்

தரு, ரு-அரிச்சந்தனம், கற்பகம், ச
ந்தானம், பாரிசாதம், மந்தாரம்

தருமநூல், ௰அ-மநு, அத்திரி, ஔரீ
தம், விட்டுணு, யாஞ்ஞவற்கியம்,
உசனம், ஆங்கிரசம், யமம், ஆப
த்தம்பம், சம்வர்த்தம், காத்தியா
யனம், பிரகற்பதி, பராசரம், வி
யாசம், சங்கலிதம், தக்கம், கௌ
தமம், சாதான்மம், வசிட்டம், இ
வற்றுட் சங்கலிதம்பொது, இவ
வற்றுள், கிரேதாயுகத்தில், மநு
மிருதியும், திரேதாயுகத்திற்கௌ
தமமிருதியும், துவாபரத்திற் சங்
கலிதமிருதியும், கலியுகத்திற் ப
ராசரமிருதியுமுக்கியமாயிருக்கும்

## தா

தாது, எ-இரதம், இரத்தம், சுக்கி
லம், மூளை, தசை, எலும்பு, தோல்

தாயர், ரு-பாராட்டுந்தாய், ஊட்டு
ந்தாய், முலைத்தாய், கைத்தாய்,
செவிலித்தாய், அன்றியுமரசன்
றேவி, குருவின்றேவி, அண்ணன்
றேவி, தன்றேவியையீன்றாள், த
ன்னையீன்றாள்

தாரணை, ௬-காமதாரணை, வச்சிரதா
ரணை, மரயாதாரணை, சித்திரதார
ணை, செய்யுட்டாரணை, நிறைவுகு
றைவாகிய வெண்பொருட்டார
ணை, சத்ததாரணை, வத்துத்தார
ணை, சதுரங்கதாரணை

தாளம், ரு-சச்சற்புடம், சாசற்புட
ம், சட்பிதாபுத்திரிகம், சம்பத்து
வேட்டம், உற்கடிதம், இவற்றுட்
சச்சற்புடமாவது குரு, உ, இல
கு, க, புலுதம், க, ஃஃ|ஃ, ஆ
கமாத்திரை, அ, இஃதீசான சத்
யோசாதமுகத்திற்பிறந்தது, பிர
மசாதி,) சாசற்புடமாவது, குரு,
க, இலகு, உ, குரு, க, ஃ||ஃ,
ஆகமாத்திரை, ௬, இஃதீசானவா
மமுகத்திற்பிறந்தது அரசசாதி,)
சட்பிதாபுத்திரிகமாவது, புலுத
ம், க, இலகு, க, குரு, உ, இலகு,
க, புலுதம், க, ஃ|ஃஃ|ஃ, ஆக
மாத்திரை, ௰உ, இஃதீசனங்கார
முகத்திற்பிறந்தது, வைசியசாதி,)
சம்பத்துவேட்டமாவது, புலுத
ம், ஏ, குரு, ௩, புலுதம், க, ஃ, ஃ

ஃ ஃ, ஃ, ஆகமாத்திரை, ௰௨, இஃதீசன்றற்புருடமுகத்திற் பிறந்தது, ருத்திரசாதி,) உற்கடிதமாவது, குரு,௧, ஃஃஃ, ஆகமாத்திரை, ௬, இஃதீசானமுகத்திற் பிறந்தது, சங்கிரமசாதி,)

தாளம், ௭-துருவம், மட்டியம், உருபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம், இவற்றுள்,துருவத்திற்கு, இலகு, ௧,குருக,௧, துரிதம், ௧, | O, இதற்குச் சுரம், சரிகம, கரிசரிகரிசரி, கம,) மட்டியத்திற்கு, இலகு, ௧, துரிதம், ௧, இலகு, ௧, | O |, இதற்குச் சுரம், சரிகரி, சரி, கரிகம,)உருபகத்திற்கு, இலகு,௧,துரிதம்,௧, | O, இதற்குச்சுரம்,சரி,சரிகம,) சம்பைக்கு, இலகு, ௧, அநுதுரிதம், ௧. துரிதம், ௧, | ‿ O, இதற்குச்சுரம், ச, ரிக, சரிசரி, கமா,)திரிபுடைக்கு, துரிதம், ௧, அநுதுரிதம், ௧, O O O ‿, இதற்குச்சுரம், கரிகசரிகம,) அடதாளத்திற்கு, இலகு, ௧, துரிதம், ௨, இலகு,௧, | O O |, இதற்குச்சுரம்,சரிகா, சாரிகா, மா, மா,) ஏகதாளத்திற்கு இலகு, ௧, |, இதற்குச்சுரம், சரிகம,) சம்பைக்குப்பிரமசாதிதவிரநான்குசாதியுமுள,திரிபுடைக்கு மூன்றுவிராமமு மோரநுதுரிதமுமாளுலோரேசாதி, இலகுவிருந்தாலைந்துசாதியுமுள, மற்றையைந்துதாளங்கட்கு மைந்துசாதியுமுள, அவற்றையவ்வவசாதியேகதாலகு, அக்கரங்களாலறியுமாறு, பிரமசாதியிலகுவிற்கு நான்கக்கரகாலம், அரசசாதியிலகுவிற்குமூன்றக்கரகாலம், ஆறக்கரகாலமுமென்ப, வைசியசாதியிலகுவிற்கேளக்கரகாலம், ருத்திரசாதியிலகுவிற்கைந்தக்கரகாலம், சங்கிரமசாதியிலகுவிற்கொன்பதக்கரகாலம், எச்சாதியிலுமநுதுரிதமோரக்கரகாலமுந்துரிதமிரண்டக்கரகாலமுமாம

தாளம், ௯-அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயதாளம், சித்திரதாளம், துருவதாளம், நிவிர்த்ததாளம், படிமதாளம், விடதாளம், இவையே நவசந்திதாளம்

தாளப்பிராணம், ௰-காலம். மார்க்கம், கிரியை, அங்கம், கிரகம் சாதி, கலை, இலயை, யதி, பிரத்தாரம், இவையே தாளதசப்பிராணமென்ப, இவற்றுட் காலப்பிரமாணம்,௰, அவையாவன, கணம், இலவம், காட்டை, நிமிடம், துடி, துரிதம், இலகு,குரு,புளுதம், காகபதம், இவற்றுட்கணம், தாமரையிதழ்நூறடுக்கி யதிலோரிதழிலூசிசெலுத்துங்காலம்,)கணமெட்டுக்கொண்டதிலவம்) இலவமெட்டுக்கொண்டது காட்டை) காட்டையெட்டுக்கொண்டது நிமிடம்) நிமிடமெட்டுக்கொண்டது துடி) துடியிரண்டுகொண்டது துரிதம், துரிதமிரண்டுகொண்ட இலகு) இலகிரண்டுகொண்டதுகுரு) இலகு மூன்றுகொண்டது புளுதம்) குருவிரண்டுகொண்டதுகாகபதம்) மார்க்கம், ௬, தக்கணம், வார்த்திகம், சித்திரம், சித்திரதரம், அர்த்தசித்திரம், அதிசித்திரம், இவற்றுள், எட்டுமாத்திரையோர்கலையாகக்கொண்டது தக்கணம்) நான்குமாத்திரை யோர்கலையாகக்கொண்டது வார்த்திகம்) இரண்டுமாத்திரை யோர்கலையாகக்கொண்டது சித்திரம்) ஒருமாத்திரையோர்கலையாகக்கொண்டது சித்திரதரம்) அரைமாத்திரை யோர்கலையாகக் கொண்டது அர்த்தசித்திரம்) கான்மாத்திரை யோர்கலையாகக்கொண்டது அதிசித்திரம்) நொடியளவுமாத்திரை) கிரியை, ௨, மார்க்கம், தேசிகம், இவற்றுண் மார்க்கம், ௮, இவற்றுணிசத்தம், ௪, சசத்தம், ௪, நிசத்தமாவது, ஆவாபம், நிட்கிராமம், விட்சேபம், பிரவேசம்) சசத்தமாவது, துருவம், சம்மியம், தாளம், சன்னிபாதம்) தேசிகம், ௮, துருவகம், சர்ப்பிணி, கிருட்டியை, பதுமினி, விசர்ச்சிதை வட்சிப்த்தம, பதாகை, பதிதம, இவற்றின் லக்கியங்களை நாலாது

ணர்க) அங்கம், ௬, அவையாவன, ◡ ○|8 8 +, இவைமுறையே, பிறை, மதி, கணை, வில், பாம்பு, புள்ளடி, முறையேயிவற்றின் பெயர், அநுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதம், இவற்றினுற்பத்திகளும், பரியாயநாமங்களும், வண்ணங்களும், அதிதேவதைகளும், மாத்திரைகளும். அத்தாங்குலப்பிரமாணங்களும், காதைப்பிரமாணங்களும், நூலாலுணர்க) கிரகம், ௪, அநிதம், அநாகதம், சமம், விடமம், இவற்றுட் குரான்முன்னுந்தாளம்பின்னும் வருவதநிதம்,) தாளம்முன்னுங்குரல்பின்னும்வருவதநாகதம்,) குரலுந் தாளமுமொத்துவரிற்சமம்,) குரலுந்தாளமும்முன்னும் பின்னுங்கலந்துவருவதுவிடமம்,) சாதி, ௫, சதுரசிரம், திரிசிரம், மிசிரம், கண்டம், சங்கீரணம், இவைமுறையே பிரமவாசவைசியசூத்திரசங்கிரமம், இவற்றை முற்கூறியவிலகு, அக்கரகாலங்களாலறிவது,) கலை, ௩, ஏககலை, துவிகலை, சதுர்க்கலை, இவற்றுளக்கரகாலமாயுங்கிரியையோடும்வருவது, ஏககலை,) இதனையிரட்டித்துக்கிரியையோடுவருவது துவிகலை, இதனையிரட்டித்துக்கிரியையோடு வருவது சதுர்க்கலை, இலயை, ௩, விளம்பம், மத்திமம், துரிதம், இவற்றுளக்கரகாலமாய்க்கிரியையோடுவருவது விளம்பம்,) இதனையிரட்டித்துக்கிரியையோடுவருவதுமத்திமம், இதனையிரட்டித்துக்கிரியையோடுவருவதுதுரிதம்,) யதி, ௬, சமம், விடமம், மிருதங்கம், வேதமத்தியம், கோபுச்சம், சுரோதோவகம், இவற்றுள், நெட்டங்கமாயினுங்குற்றங்கமாயினுமொரேவிதமாய்வருவதுசமயதி, ◡◡. ||,) எல்லாவங்கமுங்கிரமமின்றிக்கலந்துவருவதுவிடமயதி, 8 ◡ ○,) முதலினுங்கடையினுங்குற்றங்கமுமிடையினெட்டங்கமும்வருவதுமிருதங்கயதி, ◡○8 ○◡,) முதலினுங்கடையினுநெட்டங்கமுமிடையிற் குற்றங்கமும் வருவதுவேதமத்தியயதி, |◡|, முதலிலே நெட்டங்கமுமீற்றிலே குற்றங்கமுமாய்சேர்ந்துவருவதுகோபுச்சயதி, ꩜ 8 | ○ ◡,) முதலிலே குற்றங்கமுமீற்றிலேநெட்டங்கமுமாய்வருவதுசுரோதோவகம் ◡○| 8 8,) மற்றையவிவ்விலக்கணத்தாற்கண்டுணர்க

தானம், ௩-தலைப்படுதானம், இடைப்படுதானம், கடைப்படுதானம், அவையாவன, அறத்தானீட்டிய பொருளை முச்குற்றமற்ற நற்றவத்தோரைக்கொள்கெனப்பணித்துகுறையிரந்து தம்முன்னமுவந்தீதல்தலைப்படுதானம்,) ஆதுலர்குருடர்மாதர்முதற்பிறர்சிறுமையைப்பற்றி மனமிரங்கியீவதிடைப்படுதானம்,) புகழார்வங்கைமாறெச்சங்கண்ணோட்டங்காரணங் கடைப்பாடிவற்றைப்பற்றியீவதுகடைப்படுதானம்,)

தானை, ௬-தேர், கரி, பரி, வாழ், வில், வேல்

# தி

திக்கு, அ-கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு, இவையேயட்டதிக்கு

திக்கு, ௰-மேற்சொன்னவையன்றி, மேலுங்கீழுங் கூட்டித் தசதிசையென்ப, கிழக்குக்கருடதிசை, தென்கிழக்குப்பூனைத்திசை, தெற்குச்சிங்கத்திசை, தென்மேற்குச்சுனகதிசை, மேற்கு, நாகத்திசை, வடமேற்கெலித்திசை, வடக்குயானைத்திசை, வடகிழக்கு முயற்றிசை, மேல்விசும்புத்திசை, கீழ்பாதாளதிசை

திக்குபாலகர் அ-கிழக்காதிமுறையே இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், இவர்க்குமுறையேகுறிகளாவன், கொடி, புகை, சியம், நாய், இடபம், கழுதை, யானை, காகம்

திக்குயானைகள், அ-கிழக்காதிமுறையே, ஐராவதம், புண்டரீகம, வா

மணம், குமுதம், அஞ்சனம், புட்
பதந்தம், சார்வபூமம், சுப்பிரதீ
பம், இவையேயட்டதிக்கயம், இ
வற்றிற்குமுறைபேபிடியானைகளா
வன, அப்பிரமை, கபிலை, பிங்க
லை, அனுபமை, தாமிரபருணி, சு
தந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி

திணை, ௨-உயர்திணை, அஃறிணை, இ
வற்றுள் உயர்திணை,மக்களும்,தே
வரும், நரகருமாம், அஃறிணை, ம
ற்றவுயிருள்ளனவுமில்லனவுமாகிய
யாவுமாம்

திணை, ௫-குறிஞ்சி, பாலை, முல்லை,ம
ருதம், நெய்தல், இவற்றுள், மலை
ச்சார்பு, குறிஞ்சி, நீரல்லாக்கடுநி
லம்பாலை, காட்டுச்சார்புமுல்லை,
வயற்சார்புமருதம், கடற்சார்பு
நெய்தல்

திதி, ௰௫-பிரதமை, ௧, விதியை, ௨
திரிதியை, ௩, சதுர்த்தி, ௪,பஞ்ச
மி, ௫, சட்டி, ௬, சத்தமி, ௭,அ
ட்டமி, ௮, நவமி, ௯, தசமி, ௰,ஏ
காதசி, ௰௧, துவாதசி, ௰௨, தி
ரையோதசி, ௰௩,சதுர்த்தசி,௰௪,
இவற்றிற் சுக்கிலபக்கத்திற் சுத்த
மென்றுங் கிருட்டினபக்கத்திற் ப
குளமென்றுங்கூட்டுக, பதினைந்
தாந்திதியாவது, சுக்கிலபக்கத்தி
ற்குப் பௌர்ணமி, கிருட்டினபக்
கத்திற்கு, அமாவாசியை

திரவிடம், ௫-திரவிடம்,ஆந்திரம், க
ன்னடம், மகாராட்டிரம், கூர்ச்
சரம்

திரவியம், ௫-மலைபடுதிரவியம், கா
டுபடுதிரவியம், நாடுபடுதிரவியம்,
நகர்படுதிரவியம், கடல்படுதிரவ
யம், இவற்றுண்மலைபடுதிரவியம்,
மிளகு,கோட்டம்,அகில, தக்கோ
லம், குங்குமம்,)காடுபடுதிரவியம்,
இருல், ம்தேன், அரக்கு. மயிற்பீலி,
நாவி,) நாடுபடுதிரவியம், செந்நெ
ல்லு, சிறுபயறு,கரும்பு, வாழை,
செவ்விளநீர்,) நகர்படுதிரவியம,
அரசன், பித்தல், மந்தி, யானை,
கண்ணாடி,) கடல்படுதிரவியம், உ
ப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்
கோலை

திருமாலவதாரம், ௰-மச்சம், கூர்ம
ம், வராகம், நரசிங்கம், வாமன
ன், பரசிராமன், இராமன், பல
பத்திரன், கண்ணன், கற்கி, இவ
ற்றிற்குக்காரணம், வேதத்தைத்
திருடிக்கடலிலொளித்தசோமுகா
சுரனெனு மிராக்கதனைக் கொல்ல
மச்சாவதாரம்) கடலைக்கடையும்
போது மந்தர மலையைத் தாங்கக்
கூர்மாவதாரம்) பூமியைப்பாயா
கவிரணியாக்கன் சுருட்டினதை வி
ரிக்கவுமவனைக் கொல்லவும் வரா
காவதாரம்) இப்பழிவாங்கச் சரு
வதேவவணக்கம்விலக்கினவவன்ற
ம்பிவிரணியகசிபனைக்கொல்ல நர
சிங்காவதாரம்,) இந்நான் கவதா
ரத்துக்குந்தாயரில்லை, மாவலியை
யடக்கக்காசிபனுக்திதியுந்தந்தை
தாயாக வாமனாவதாரம்,) அரச
ராற்சூழ்ந்தப்பட்ட பார்ப்பார்கி
மித்தமவ்வரசரைக்கொல்லச் சத
மக்கினியு மிரேணுகையுந் தந்தை
தாயாகப்பரசிராமாவதாரம்,)இ
ராவணன்முதலிய விராக்கதரைக்
கொல்லத் தசரதனுங்கௌசலை
யுந்தந்தைதாயாக விராமாவதார
ம்,) பிரலம்பன்முதற்பல விராக்க
தரைக்கொல்ல வசுதேவனுந் தே
வகியுமுரோகணியுந்தந்தைதாயா
கப்பலபத்திராமாவதாரம்,)பா
ரதநடத்த வசுதேவனுந்தேவகியுந்
தந்தைதாயாகக் கண்ணனவதார
ம்,) உலகங்களைச்சங்கரிக்கக் கற்
கியவதாரம்

திருமாலவதாரம், ௰௫-சனகன், சன
ந்தனன்,சனுதன்,சனற்குமாரன்,
நரநாராயணன், கபிலன், இடப
ன், நாரதன், அயக்கிரீவன், தத்
தாத்திரேயன், மோகினி, யாகப
தி, வியாதன், தன்வந்திரி, பௌத்
தன்

திருமாலாயுதம், ௫-சக்கரம்,தனுசு,
வாள், தண்டு, சங்கம்

## தீ

தீ, ௩-உயிரிலுள்ளதீ, உதரத்துள்ள
தீ, சினத்திலெழுந்தீ, அன்றியுங்,
வேதாக்கினி, ௩,காருகபத்திடம்,

தக்கணுக்கினியம், ஆகவனீயம்

நீக்குணம், ய-பொய்சொல்லல்,கோட்சொல்லல், கோபித்துச்சொல்லல், பயனிலசொலல், இக்நான்கும் வாக்கின்நீக்குணம்,களவாடப்போதல், வறிதேதொழில்செயல், கொலைசெயல், இம்மூன்றுங் காயத்தீக்குணம், கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை, இம்மூன்றும் மனத்தீக்குணம்

தீவு, எ-சாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு, இவ்வெழுவகைப்பொருளுமவ்வவதீவின்மிக்கன வாகையாலிவற்றுற்பெயர்பெற்றன

## து

துரககதி, ரு-மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி,வானரகதி, விடபகதி

துவர், ய-நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு,அத்தி, இத்தி,முத்தக்காசு, மாந்தளிர்

## தே

தேயம், ருயகூ-அங்கம்,அருணம்,அவந்தி, ஆந்திரம், இலாடம்,யவனம், ஒட்டியம், கருசம்,கலிங்கம், கன்னடம்,கன்றுடம்,காசம்,காசிமீரம், காந்தாரம், காம்போசம், கிராடம், குருகு, குடகம், குந்தளம், குரு, குலிந்தம், கூர்ச்சரம், கேகயம், கேரளம், கொங்கணம், கொல்லம், கோசலம், சகம், சவ்வீரம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சோழம், சோனகம், திராவிடம், துளுவம், தெங்கணம், நிடதம், நேபாளம், பாஞ்சாலம், பப்பரம், பல்லவம்,பாண்டியம்,புலிந்தம், போடம், மகதம், மச்சம், மராடம்,மலையாளம், மாளவம், யுகந்தரம், வங்கம், வங்காளம், விதற்பம்

தேவர், ரு-பிரமா, விட்டுணு, உருத்திரன், மயேச்சுரன், சதாசிவன், இவர் பஞ்சதேவதையும் பஞ்சகருத்தாக்களுமென்ப

தேவர்வகை, கூயக- ஆதித்தர், யஉ, அச்சுவினிகள், உ, உருத்திரர்,யக, வசுக்கள், அ

## தொ

தொழில், ௩- ஆக்கல், காத்தல், அழித்தல்

தொழில், ௬-உழவு, தொழில், வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம்

தொழில், ௬-அந்தணரறுதொழில்,ஓதல், ஓதுவித்தல, வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்,) அரசரறுதொழில்,ஓதல்,வேட்டல், ஈதல், உலகோம்பல், படைபயிற்றல், பொருதல்,) வைசியரறுதொழில், ஓதல், வேட்டல், பொருளீட்டல், ஈதல், பசுக்காத்தல், ஏருழல்,) சூத்திரரறுதொழில், முதன்மூவர்க்கேவல்செயல், பொருளீட்டல், உழுதல், பசுக்காத்தல், குயிலுவத்தொழிற்செய்தல், காருகவினைகளாக்கல், இவற்றுட் குயிலுவத்தொழில்களாவன, தோற்கருவிகளைக்கொட்டலுந் துளைக்கருவிகளையூதலுமாம், காருகவினைகளாவன, பட்டுநூலையும் பருத்திநூலையுங் கொண்டாடையாக்கலுஞ் சுமத்தலுமுழத்தலுமாம்

## தோ

தோற்றம், உ-சரம், அசரம், இவற்றுட்சரம், நடையுள்ளன், அசரம் நடையில்லன

தோற்றம். ச-ளை, முட்டை,நிலம், வியர்வை

## ந

நட்சத்திரம் உஎ-அச்சுவினி,பரணி, கார்த்திகை,உரோகணி, மிருகசீரிடம், திருவாதிரை, புநர்பூசம், பூசம், ஆயில்யம், மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம்,பூரட்டாதி, உத்திரட்டாதி, இரே

வதி, இவற்றுள் ஒவ்வொன்று, மு
றையேமேடமுதற்பன்னிரண்டிரா
சிகளிற்பதின்மூன்றபாகமுமிருப்
துகலையுங்கொண்டவிடம்

நதி, எ-கங்கை, யமுனை, சரச்சுவதி,
 நருமதை, காவேரி, குமரி, கோ
 தாவிரி, இவைபேசத்தநீர்த்தமெ
 ன்னப்படும்

நதி, யச-மேற்சொல்லியவேனின்மே
 ல், சிந்து, தாமிரபருணி, துங்க
 பத்திரி. கிட்டிணியென்றகூட்டுக

நரகம், எ-அள்ளல், இரௌரவம், கு
 ம்பிபாகம், கூடசாலம், செந்து
 த்தானம், பூதி, மாபூதி

நரகவட்டம், எ-தமப்பிரபை, இம
 ப்பிரபை, தூமப்பிரபை, வாலுக
 ப்பிபை, சாகரப்பிரபை, இரத்த
 ப்பிரபை, அழற்பிரபை, அவை
 யாவன, இருள், குளிர், புகை, ம
 ணல், துயிலாமை, இரத்தம், தீ

நரம்பு, எ-இசைகாண்க

நற்குணம், ய-மெய்யுரை, நல்வார்த்
 தை, இனியவைகூறல், பயன்படு
 சொல், இந்நான்கும் வாக்கினற்கு
 ணம், கோயில்வலம்வரல், தவம்
 புரிதல், தானஞ்செயல், இம்மூ
 றங்காயநற்குணம், அருணினைவு,
 ஆசையறுத்தல், தவப்பற்று, இ
 ம்மூன்றும் மனநற்குணம்

## நா

நாகம், அ-வாசுகி, அனந்தன், தக்க
 ன், சங்கபாலன், குளிகன், பது
 மன், மகாபதுமன், கார்க்கோட
 கன், இவற்றைக்கடவுட்பாம்பெ
 ன்ப, இவைமுறையே கிழக்குமு
 தலெண்டிக்கிற் பூமியைத் தாங்கு
 வதன்றியே நடுவேசேடனென்னு
 நாகம் பூமியைத்தாங்காநிற்கும்,
 இந்நவநாகமுங்காசிபப்பிரமாவுக்
 குமவன்மனைவிகள் பதின்மூவருட்
 கத்துருவைக்கும்பிறந்தன

நாடி, ய-சுழிமுனை, இடை, பிங்கலை,
 காந்தாரி, அத்தி, சிகுவை, அலம்
 புடை, புருடன், குரு, சங்கினி, அ
 வையாவன, சுழிமுனையாதாரமா
 றினுமூடுருவிநிற்பது,) இடை, பி
 ங்கலையிரண்டுங் கத்திரிகைக்காற்
 போற்பின்னிநிற்பன,) காந்தாரி
 நாபியிற்றோன்றிச் சத்தமெழுக்கு
 மெழுநாடியாகக் கண்டத்துறவ
 து,) அத்தி, சிகுவையிரண்டும் ப
 த்துநாடியுற்றுக்கண்ணினிற்பன,)
 அலம்புடை, புருடனிரண்டுஞ்செ
 வியினூற்றிருப்பதுநாம்புற்றிருப்
 பன,) குரு, நாபியுறைந்து குய்ய
 ம்பற்றிநிற்பது,) சங்கினி, உப
 த்தத்தைப்பற்றியிருப்பது)

நாட்டமைதி, கூ-செல்வம், விளைநில
 ம், செங்கோல், கோயின்மை, வ
 ளம், குறும்பின்மை

நாட்டுச்குற்றம், எ-தொட்டியர், க
 ள்வர், யானை, பன்றி, விட்டில், கி
 ள்ளை, பெருமழை

நாட்டுக்குற்றம், அ-விட்டில், தன்ன
 ரசு, வேற்றரசு, யானை, மிகுமழை
 மிகுகாற்று, கிள்ளை, நட்டம்

## நி

நிலம், ச-குறிஞ்சி, முல்லை, மருதம்,
 நெய்தல

நிலை, ச-பைசாசம், மண்டலம், ஆ
 லீடம், பிரத்தியாலீடம், இவைநா
 ன்கும்விற்றொடுத்தம்பினையெய்வா
 ர்க்குரியநிலை, இவற்றிலொருகாலி
 னின்றொருகான்முடக்கல் பைசா
 சநிலை.) இருகாலும்பக்கல்வளைய
 மண்டலித்தலேமண்டலநிலை,) வ
 லக்கான்மண்டலித்திடக்கான்முன்
 துறலேயாலீடநிலை,(வலக்கான்மு
 ன்துற்றிடக்கான் மண்டலித்தலே
 பிரத்தியாலீடநிலை

## நூ

நூல், கூ-முதனூல், வழிநூல், சார்புநூ
 ல், இவற்றுளொருவன்முன் கண்டு
 ரைத்ததேமுதனூல்,) முதனூல வ
 ழியே விகற்பித்துரைத்த நூலே
 வழிநூல்,) அவ்விருநூல்பொருட்
 கூட்டித் திரிபுவேறுடையநூலே
 சார்புநூல்.)

நூற்பயன், ச-அறம், பொருள்,
 இன்பம், வீடு

## ப

பகை, ரு-பைசாசு, உலகு, உடல்

பக்குவர், ௩-கருமகாண்டி, ஞானகாண்டி, பத்திகாண்டி

பஞ்சமூலம், ௫-செவ்வியம், சித்திரமூலம், கண்டுபாரங்கி, பேராத்தை, சுக்கு

படைவகுப்பு, ௪-அணி, உண்டை, ஒட்டு, தூசம்

பட்சி, ௫-வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில், இவற்றிற்கு முறையேயெழுத்து, அ, இ, உ, எ, ஒ, உண்டி, நடை, அரசு, தூக்கம், சாவு, பிற்பக்கமாகில், உண்டி, சாவு, தூக்கம், அரசு, நடை,) சாவுதூக்கமில்லாதபொழுதறிந்துசெய்யுண்முதலியசெய்தனன்மை

பண், ௪-பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி

பதவி, ௪-சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம், இவற்றுட் கடவுளுலகத்தில்வாழ்தலேசாலோகம்,) கடவுள்சமீபத்துவாழ்தலே சாமீபம்.) கடவுளைப்போன்றுவாழ்தலேசாரூபம,) கடவுளோடொன்றிவாழ்தலேசாயுச்சியம்

பரிச்சேதம், ௩-காலபரிச்சேதம், தேயபரிச்சேதம், வத்துபரிச்சேதம், அவையாவன. ஒருகாலத்துண்டொருகாலத்தின்றென்பதுகாலபரிச்சேதம்,) ஒருதேயத்துண்டொருதேயத்தின்றென்பது தேயபரிச்சேதம்,) ஒருபொருளிதுவாகுமொருபொருளிஃதன்றென்பதுவத்துபரிச்சேதம்

பருவகாலம், ௬-கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதிர்வேனில், இவையேயாவணி முதலாக விரண்டுமாத மொவ்வொன்றும்

பருவம், ௪-வாலை, தருணி, பிரவிடை, விருத்தை, இவை பெண்கட்குரியபருவமாம்

பருவம். ௭-பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண், இவர்க்குமுறையேவயதெல்லை, ஐந்துமுதலேழளவும் பேதை,) எட்டுமுதற்பதினொன்றளவும்பெதும்பை)பன்னிரண்டுமுதற்பதின்மூன்றளவும்மங்கை,) பதினான்குமுதற்பத்தொன்பதளவும் மடந்தை,) இருபதுமுதலிருபத்தைந்தளவு மரிவை,) இருபத்தாறுமுதன் முப்பத்தொன்றளவுந் தெரிவை,) முப்பத்திரண்டுமுத னாற்பதளவும் பேரிளம்பெண்,) ஆகையாலொவ்வொருபருவங்கொண்டவருடம், ௩, ௪, ௨, ௬, ௬, ௬, ௬, இவைபெண்கட்குரிய பருவமாம்

பலை, ௩-கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், இவையே திரிபலையென்ப

## பா

பா, ௫-வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பாவொன்றகூட்டியைத்தென்பாருமுளர்

பாடை, ௰௮-அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனகம், திரவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்

பாதகம், ௫-கொலை, பொய், களவு, கள்ளருந்தல், குருநிந்தை, இவையேபஞ்சமாபாதகம்

பாதகம், ௭-சித்தசமுன்னதி, அருத்தலோபம், காமம், வைடம்மியம், அசனப்பிரியம், கோபம், அநாட்டணம், இவையேசத்தவிசனம், இவைமுறையே, அகங்காரம், உலோபம், காமம், பகை, போசனப்பிரியம், காய்கல், சோம்பல், இவை ஏழுந்தலைமையானபாதகமெனப்படும்

பாலை, ௭-இசையைக்காண்க

பால், ௫-ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல

பால், ௫-முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை, இவற்றுண்மயிரையுச்சியின்முடித்தலேமுடி,) பக்கன்முடித்தலேகொண்டை,) பின்னேசெருகல்சுருள்,) சுருட்டிமுடித்தலேகுழல்,) பின்னிவிடுதலே பனிச்சை)

பாவபுண்ணியவழக்கம், ௩ செய்தல்,

செப்வித்தல், உடல் படல்
பாவினம், ௩-தாழிசை, துறை, விரு
த்தம்

# பி

பிணி, ௩-வாதம், பித்தம், சிலேட்டுமம்
பிரபந்தம், ௯௬-அவையாவன,
சாதகம்,) திதிநிலை, வாரநிலை, நா
ண்மீனிலை, யோகநிலை, கரணநிலை.
ஓரைநிலை, கிரகநிலை, இவ்வெழுவ
கையுறுப்புக்களிலையையுஞ் சோ
திட நூலானன்குணர்ந்தவற்றைய
மைத்தவற்றாற் றலைவற்குறவனகூ
றுவது, மற்றும்புகாரியாண்டுமு
தலியவுங்கொள்க
பிள்ளைக்கவி,) காப்பு, செங்கீரை,
தால், சப்பாணி, முத்தம், வாரா
னை, அம்புலி, சிறுபறை, சிற்றில்,
சிறுதேர், இவற்றைமுறையேயக
வல் விருத்தத்தாற் பப்பத்தாகக்
கூறுவதாண்பாற்பிள்ளைக்கவி, இ
வ்வுறுப்பினுட் கடைமூன்றொழித்
து, கழங்கு, அம்மானை, ஊசல், எ
ன்பவற்றைக்கூட்டி மேற்சொல்வி
யவாறுகூறுவது பெண்பாற் பிள்
ளைக்கவியாம்
பரணி,) போர்முகத்தாயிரங்களி
ற்றியானையைக்கொன்ற வீரனைத்
தலைமகனாகக்கொண்டு கடவுள்வா
ழ்த்துங் கடைதிறப்பும் பாலைநில
மும் காளிகோயிலும்பேய்களோ
டுகாளியுங்காளியோடுபேய்களுஞ்
சொல்லத் தான்சொல்லக்கருதிய
தலைவன் சீர்த்திவிளங்குமவன்
வழியாகப் புறப் பொருடோன்ற
வெம்போர்வழங்க விரும்புமெ
ன்றிவைபொல்லா மிருசீரடிமுச்சீர
டியொழித்தொழிந்த மற்றடியாக
வீரடிப்பஃறொழிசையாற்பாடுவது
கலம்பகம்,) ஒருபோகும், வெண்
பாவும், கலித்துறையுமுதற்கவியு
றுப்பாகமுற்கூறிப்புயவகுப்பு, ம
தங்கம், அம்மானை, காலம், சம்பி
ரதம், கார், தவம், குறம், மறம்,
பாண், களி, சித்து, இரங்கல், கை
க்கிளை, தூது, வண்டு, தழை, ஊ
சல், என்னுமிப்பதினெட்டுறுப்பு
க்களுமியைய, மடக்கு, மருட்பா,
ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்
பா, ஆசிரியவிருத்தம், கலிவிருத்
தம், கலித்தாழிசை, வஞ்சிவிருத்
தம், வஞ்சித்துறை, வெண்டுறை
யென்னுமிவற்றாலிடையே வெண்
பா, கலித்துறை, விரவியந்தாதித்
தொடையான்முற்றுறக்கூறுங்கா
ற்றேவர்க்குநூறும், அந்தணர்க்கு
த்தொண்ணூற்றைந்தும், அரசர்
க்குத்தொண்ணூறும், வைசியர்க்
கைம்பதும், சூத்திரர்க்கு முப்ப
துமாகப்பாடுவது
அகப்பொருட்கோவை,) இருவ
கைப்பட்ட முதற்பொருளும் பதி
னான்குவகைப்பட்ட கருப்பொ
ருளும பத்துவகைப்பட்ட வுரிப்
பொருளும் பொருந்திக் கைக்கிளை
முதலாற்ற வன்புடைக்காமப்பகு
தியவாங் களவொழுக்கத்தினையுங்
கற்பொழுக்கத்தினையுங்கூறுதலே
யெல்லையாகக் கட்டளைக்கலித்து
றை, நானூற்றுற்றினைமுதலாகத்
துறையீறாகக்கூறப்பட்ட பன்னி
ரண்டகப் பாட்டுறுப்பும் வழுவி
ன்றித் தோன்றப்பாடுவது, இது
வெண்பா, அகவல், கலி, வஞ்சி,
வண்ணம், இவற்றானும் வழங்கப்
படும்
ஐந்திணைச்செய்புள்,) புணர்தன்மு
தலியவைந்துரிப்பொருளும் வி
ங்கக் குறிஞ்சிமுதலிய வைந்திணை
பினையுங்கூறுவது
வருக்கக்கோவை) அகரமுதலா
கியவெழுத்துவருக்கமொழிக்குமு
தலாமெழுத்துமுறையேகாரிகை
த்துறைப்பாட்டாகப் பாடுவது
மும்மணிக்கோவை,) ஆசிரியப்பா
வும், வெண்பாவும், நேரசையுநி
ரையசையுங்கொண் டெழுத்தெ
ண்ணிப் பாடுங்கலித்துறையு மு
றையேதொடைமுப்பதுபெறவடு
க்கியந்தாதித்தொடையாற் பாடு
வது
அங்கமாலை) ஆண்மகனுக்கும்பெ
ண்டனுக்கு மிக்கென வெடுத்துக்
கூறுமவையவங்களை வெண்பாவா
லாயினும்வெளிவிருத்தத்தாலாயி
னும்பாத திகேசங்கேசாதிபாத

